உ

# தோத்திரக் கோவை






ச. பூபால பிள்ளை.

உ

சிவமயம்.

# தோத்திரக் கோவை.



முதற் பாகம்

(இதில் அடங்கிய பிரபந்தம் பத்து.)



இவற்றை இயற்றியவர் மட்டுநகர் வித்துவான்

**ச. பூபால பிள்ளை.**



நூலாசிரியர் குமாரர்

இராஜசபாரத்தினமவர்களின்

கேள்விப்படி தொகுத்து அச்சிற்பதிப்பித்தவர்

திருமயிலாப்பூர்

**சே. வே. ஜம்புலிங்கம் பிள்ளை.**



சென்னை

**கம்மர்ஷியல் பிரஸ்.**





1923.

# உள்ளுறை.

# பிழை திருத்தம்

☞ (இப்புத்தகத்தைக் கையாடுவோர் படிக்கத் தொடங்கு முன் இதனடியிற் காட்டிய அச்சுப்பிழைகளை, ஆங்காங்கு, திருத்திக் கொள்வது நன்று.)

| பக்கம் | பா விலக்கம் | அடி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 6 | 63 | 1 | மேவிரும்வி | மேவிரும்பி |
| 13 | 6 | 5 | நீபிரியு | நீபுரியு |
| 17 | 35 | — | பத்திகொளதிகைப் | பத்திகொள் வதிகைப் |
| 19 | 95 | — | நீற்ருர் | நீற்ருற் |
| ,, | ~~103~~ | ~~—~~ | ~~கோசரிக்~~ | ~~கேசரிக்~~ |
| 20 | 105 | — | மன்னர் | மன்னர்க் |
| 21 | 137 | — | பரமபதம் | பரமதம் |
| ,, | 145 | — | வரரம்பையர் | வரம்பையர் |
| ,, | 148 | — | யார்கழு | யாற்கழு |
| ,, | 153 | — | இங்கவ | ஆங்கவ |
| 28 | 320 | — | பெருமா | பெறுமா |
| ,, | 341 | — | சாந்தவர் | சார்ந்தவர் |
| 35 | 73 | — | அருமை யின்ப | அருமைய வின்ப |
| ,, | 76 | — | தெவிட்ட | தெவிட்டா |
| 41 | 1 | 1 | கமலமமர் | கமலமலர் |
| 42 | 2 | 3 | தரரியக்கர் | தரர்யக்கர் |
| 44 | 5 | 11 | பரவுனது | வரவுனது |
| 48 | (காப்பு) | 1 | வளங்கூறுங் | வளங்கூருஞ் |
| ,, | 1 | 3 | செங்கதிரோ | செங்கதிரொ |
| 53 | 10 | 4 | மதிழ்விஞெடு | மகிழ்விஞெடு |
| 72 | | 20 | கொல்வது | கொள்வது |
| 75 | 15 | 3 | வெனமயற் | வென்மயற் |
| 79 | 41 | 1 | ருறுகிவெங் | குறுகிவெங் |

சிவமயம்.

# தோத்திரக் கோவை.

## முகவுரை.

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ருடொழாஅ ரெனின்." திருக்குறள்.

இந் நிலவுலகின் கண்ணே பெறுதற்கரிய மானுடப் பிறவியை எய்தினேர்தமக்கு அமைந்து பொருந்த வேண்டிய செவ்விய இலக்கணம் பலவற்றுள்ளும் விசேடமாய்த் தலைசிறந் தொளிர்வது **கடவுட் பத்தியேயாம்.** அன்னபத்தி ஒருவற்குச் சாலவமையுமாயின் அவன் எப்பொழுதும் தீயன வற்றை வெறுத்தொதுக்கி நல்லொழுக்கங்களைத் தழுவித் தருமநெறி சேறுவான்.

கடவுட் பத்தி மிக்குள்ள பெரியோர் அட்பத்தியில் விளைவதாகிய அன்பு சுரக்கும் பொழுதெல்லாம் ஆனந்தக் கண்ணீர் பெருக்கிக் கடவுளரை வாயுற வாழ்த்தி ஆடிப் பாடிப் போற்றுதலும் இடுக்கண் எய்துழி குறையிரந்து வரம்பல கோடலும் இயல்பாய வழக்கேயாம். அங்ஙனம் சான்ருேர் கூறும் செபங்களாகிய தோத்திரங்கள் வசன ரூபமாயிருப்பின் பிறர் பாவித்தற் குபயோகப் படாமல் கூறிய அவ்வவ்விடங்களிலேயே அடங்கி மறைந்துவிடும். செய்யுணடையிலிருந்து சேமிக்கப்படுமாயின் பிறபலர்க்

கும் பிரயோசனப்படக் கூடியதாயிருக்கும். ஆதலின் பண்டைச் சான்ரேரும், மேதாவிகளும், பிற்காலத்தாரும், தற்காலத்தாரும் கூறிப்போந்த தோத்திரப் பாக்களைச் சிதைந்தழிய விடாமல் தொகுத்துச் சேமித்து வைத்தலும் பிரசுரஞ் செய்தலும் நன்ருகுமென்க.

ஈழமண்டலக் குணதிசைத் தலை நகரியாய மட்டுநகர் வாசரும், மதுரைத்தமிழ்ச்சங்கத்துத் தமிழ்ப் பரீக்ஷிகரும், "சீமந்தனிபுராணம்," விநாயக மான்மியம்" "தமிழ்வரலாறு" முதலாகிய பலப்பல நூலாசிரியரும், "உலகியல் விளக்கம்" முதலிய நூல்களின் உரையாசிரியரும், எமது அத்தியந்த நண்பருமாகிய வித்துவான் ச. பூபாலபிள்ளையவர்கள் காலத்திற்குக்காலம் இயற்றிய சில்லறைச் சிறு பிரபந்தங்கள் பலவாகும். அவற்றுள் இருபது பிரபந்தங்கள் தெய்வதோத்திரங்களேயாம். இவ்விருபதினுள் பொருள் வெளியாகவும் யாவராலும் எளிதில் விளங்கக்கூடிய தெள்ளிய நடையுடையனவாகவும் இருக்கின்ற பத்துப்பிரபந்தங்களைத் தெரிந்து தொகுத்து முதற்பாகமாக இப்பொழுது பிரசுரஞ் செய்கின்ரும் - ஏனையபத்துப் பிரபந்தங்களும், மடக்காகவும், யமகமாகவும் நடக்கும் அந்தாதிகளும், அருந்தொடர் விரவிய கடிய நடையில் யாக்கப்பட்ட கலம்பகம், பிள்ளைக்கவி, இணைமணி, மும்மணி, நான்மணிமாலைகளுமாயிருத்தலின் தருணங்கண்டு இரண்டாம் பாகமாக அரும்பத விளக்கமுஞ் சேர்த்து அச்சிடுவிப்பாம்.

இம்முதற் பாகத்தில் அடங்கிய பிரபந்தங்கள் வருமாறு:—

1. **கணேசர்கலிவெண்பா.**—இந்நூல் 1922-ம் ஆண்டில் இயற்றப்பட்டது. காப்பு உள்ளிட்டு 116 கலிவெண்பாக்

களையுடையது. பார்க்கவபுராணச் சரிதப்பொழிப்பை ஒருவாறு குறித்துச்சொல்வது.

2. **சிவதோத்திரம்.**--இது 1906-ம் ஆண்டளவில் நூலாசிரியர் கண்டியில் உத்தியோகத்தமர்ந்திருந்த காலத்தில் ஒருவர் கேள்விப்படி செய்து கொடுக்கப்பட்டது. கலிவிருத்தம் ஒன்றைக் காப்பாயுடையது. நூலில் அடங்கிய ஆசிரிய விருத்தம் 10, அகவல் அடி 354, எழுசீர் விருத்தம் 10. அகவலின்கண் சிவதொண்டர் சரிதப்பொழிப்பு ஒருவாறுசுட்டப்படுகின்றது.

3. **யாழ்ப்பாணத்து அரசடி விநாயகர்அகவல்.**—இது 1920ஹு ஒருவர் கேள்விப்படி செய்யப்பட்டது. 82அடிகளையுடையது.

4. **சிவமாலை.**—இது 1921-ஹு இயற்றப்பட்டது. அகரமுதல் ஒளகார மீறாயுள்ளபன்னிரு எழுத்துக்கள் முதலில்வர அந்தாதித்துப் பாடப்பட்ட பன்னிருவிருத்தமும் காப்பகவல் ஒன்றுங் கூடியசெய்யுட்களையுடையது.

5. **பெரியதுறைத் திருமுருகர்பதிகம்.**—இது1882ம்ஹு பாடப்பெற்றது. ஆசிரியவிருத்தம் பத்தும் காப்புக்கலி விருத்தம் ஒன்றும் அடங்கியது.

6. **புளியங்கர்ச் சித்தி விக்கினேசுரர் பதிகம்.**—இது நூலாசிரியர் 1905-ஹு கொழும்பில் உத்தியோகத்தமர்ந்திருந்த நாளில் ஒருவர் கேள்விப்படி இயற்றியது. பத்து ஆசிரிய விருத்தங்களும், காப்பு வெண்பா ஒன்றும் அடங்கியது.

7. **கண்டிநகர்ச் செல்வ விநாயகர் பதிகம்.**— இது 1913ஹ கண்டியில் உத்தியோகமாயிருந்த காலத்தில் பாடப் பட்டது. ஆசிரியவிருத்தம் 10, காப்பு வெண்பா 2, ஆசிரி யப்பா 1, வாழிவிருத்தம் 2, வெண்பா ஒன்றும் அடங்கியது.

8. **கண்டிநகர்க் கதிரேசர் பதிகம்.**—இது மேற்படி இடத்திலும் காலத்திலும் பாடப்பட்டது. ஆசிரியவிருத்தம் பத்து, காப்பு வெண்பா மூன்று, வாழிவெண்பா மூன்றும் அடங்கியது.

9. **மட்டுநகர்க் கோத்துக்குளத்து மகாமாரி அம்மன் அந்தாதி.**—இது 1922-ஹ பாடப்பட்டது. நூறுகலித் துறையும், காப்பு வெண்பாவொன்றும் அடங்கியது. இதன் வரலாற்றை ஆசிரியர் எழுதியமுகவுரையிற் காண்க. (71-ம் பக்கம்)

10. **நல்லிசை நாற்பது.**—இது 1919 ஹ இயற்றப் பட்டு மதுரைச் செந்தமிழ்ப் பத்திரிகையிற் பிரசுரமானது. நிந்தாஸ்துதியாகிய நாற்பது வெண்பாக்களும், காப்புவெண் பாக்கள் இரண்டும், வாழிவெண்பாக்கள் இரண்டும் அடங் கியது.

"ஒருப்படுமறத்தினுலே யொண்பொருளின் பஞ்செம்பொற்
பருப்பதங்கடல் போல்வந்து பயப்படுமதனைக் கேண்மோ
விருப்பொடு வெறுப்பிலாத மிக்கவெண் குணத்தோ டொன்று
யிருப்பவன்யாவனன்னுனிணையடி வணங்கல் வேண்டும்"

(விநாயக புராணம்)

திருமயிலாப்பூர்,
1—2—23.

இங்ஙனம்
சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளை.

உ

சிவமயம்.

# தோத்திரக் கோவை

## முதலாவது

## கணேசர் கலிவெண்பா.

(காப்பு)

கற்பகனு மெந்தை கணேசர் கவிஞர்ந்த
சொற்பதமே யென்றுந் துணை.

### நூல்

ஆதியா யெங்கு மடர்ந்த முதற்பொருளே
ஓது பிரணவத்தி னுள்ளுறைபி னுள்ளுறையே 1

வேதமுத லாகி விரிந்தகன்ற மேன்மையனே
நாதரொரு மூவர்க்கு நாயகமாய் நின்றவனே 2

கங்கை தவழ்வேணிக் கண்ணுதலுந் தேவியருந்
தங்கள் முதல்வனெனத் தாம்பேணும் பாலகனே 3

பூதங்க டோறும் பொலிவாகப் புக்கிருந்து
பேதங்கொள் லீலை பெரிதிழைக்கும் பெற்றியனே 4

நம்பித் தொழுவாரை நாளும் புரந்தளிக்குந்
தும்பிமுகத் தைந்துகரத் தொந்திக் கணபதியே 5

முப்பழமும் பாலிளநீர் மோதகமு மெட்பயறும்
அப்பமுதற் கொண்டருளு மாற்றலுடைக் கற்பகமே 6

பொற்புடைய தேவுலகும் பூவுலகும் போற்றவரு
கற்கண்டே தேனே கனிமுதிர்ந்த செங்கரும்பே 7

தித்திக்கும் பாகே தெவிட்டாத தெள்ளமுதே
பத்திக்கு நேரே பழுத்துதிருஞ் செங்கனியே 8

எத்திக்கு மேற்ற வினியமது ரச்சுவையே
முத்திக்கு வித்தாய் முளைத்தெழும்பு மோனகமே 9

புத்திக்கு ணின்று புலனடக்கும் போதகமே
சித்திக்கும் புத்திக்குஞ் சேர்ந்ததிரு நாயகனே 10

வைத்திறைஞ்சு மன்பர் மனக்கோயில் கொண்டருளிச்
சித்திபல நல்குஞ் சிவனார் திருமகனே 11

மேதை முனிவர்க்கும் விள்ளரிய நின்பெருமை
பேதை யளியேன் பிரித்திசைக்க வல்லவனே 12

ஆயிரத்தோ டேற்ற வறுநான்கு மிக்கபுகழ்ப்
பாயிரத்து நாமம் படைத்த பழம்பொருளே 13

வாழ்வேறு மோரெழுத்தில் மற்றூறு பேரெழுத்தில்
ஏழ்கோடி மந்திரத்தி லின்புற் றிருப்பவனே 14

வானவருந் தானவரும் மாசில்லாச் சித்தர்களும்
மோன முனிவரரு முந்துரக ரோடியக்கர் 15

சாரணரும் விஞ்சையருந் தாரணிவாழ் மானிடரும்
பூரணவெண் ணற்றோராய்ப் பூசிக்கப் பெற்றவனே 16

முக்குணத்திற் றோன்றிவரு மும்மூர்த்தி கட்குமனந்
தக்கதொழில் செய்யத் தகுவரங்க ணல்கினையே 17

ஆங்குபிர மன்செருக்கா லானபடைப் பத்தனையுந்
தீங்குறுத்தச் செய்து திருத்திப் புரந்தனையே 18

ஞானங் கிரியையெனு நல்லவிரு சத்தியரை
மானப் புதல்வியராய் மாமலரோன் பால்வளர்த்துப் 19

பொற்பமைந்து நீடிப் பொலிந்துயர்ந்த யௌவனத்திற்
கற்பனைக்காய்ச் சென்று கடிமணஞ் செய்தனையே 20

தானவரை வெல்வான் சடாக்கரத்தை மால்செபிக்க
ஆனசித்தி கேத்திரத்தி லன்றுவரம் நல்கினையே 21
முந்து மரபின் முறையிலுனைப் போற்ருது
வந்த குறையின் மகவற்ற வீமனவன் 22
பிந்தப் பணிந்து பெரிதுநினைப் போற்றிசெயச்
சந்ததியு நல்கித் தயவுமிகக் காட்டினையே 23
தந்தை யொறுப்பத் தவித்தழுத வல்லாளன்
பந்த மறுத்துப் பதவிபுக வைத்தனையே 24
முக்கலராற் றக்கன் முதிர்பிணியைப் போக்குவித்து
மிக்க வரசுரிமை மேவிடவுஞ் செய்தனையே 25
கூடல் விழைமுகுந்தை கூறியவெஞ் சாபத்தால்
வாடும் புகழுருக்கு மாங்கதனைக் காத்தனையே 26
சீரா ரகலிகையைச் சேர்ந்துமக வானடைந்த
பேராருஞ் சாபமதைப் பேதித்து மாற்றினையே 27
செப்பரிய மாதவங்கள் செய்த கிருச்சமதற்
கொப்பரிய மாவரங்க ளுள்விரும்பி நல்கினையே 28
பின்னு மவன்மைந்தன் பெற்றினிது வாழ்ந்திருப்ப
உன்னுமிடஞ் செல்புரங்க ளோர்மூன்று நல்கினையே 29
அந்தப் புரங்கடமைத் தாக்கவெழு மச்சிவனர்
முந்தவுனை வேண்டா முறையிற்றே ரச்சிறுத்தாய் 30
தக்கன் மகளாகித் தான்பிறந்த தோடமற
மிக்க மலையரசன் மெல்லியலாய் வந்துமையாள் 31
நின்விரத மாற்றுதலு நீயிரங்கிக் கங்கையட்கு
முன்சிவனை மன்றல் முடிக்கவருள் செய்தனையே 32
கர்த்தமனும் வேந்தன் கணித்தியற்ற நின்விரதம்
வர்த்தனையாய்ச் செல்வம் வளர்ந்திடநீ செய்தனையே 33
நாடி நளனுனது நற்சதுர்த்தி நோற்றதனூற்
பீடுயர்ந்த தேசமெலாம் பெற்றுள வைத்தனையே 34

மாது தமயந்தி மகிழ்வி னெடுநோற்றுக்
காதலனை மீட்டினிது கண்டடைந்து வாழ்ந்தனளே 35
மாளுவநாட் டிந்து மதிநோற்று முன்னொருகால்
கீழுலகிற் சென்றிருந்த கேள்வனையும் பெற்றனளே 36
தண்மருவு கிஷ்ணைநதி சார்ந்தவட சோலையிலே
சண்முகனு மேவிச் சடாக்கரத்தை நோற்றதனுல் 37
துன்று பலவரமுந் தோகைமயில் வாகனமும்
அன்றுபெற்றுச் சூர னமர்முடித்து வென்றனனே 38
பட்டெழுந்த மாரன் படிவம் பெறநோற்றுக்
கட்டழகக் கண்ணன் மகனுகத் தோன்றினனே 39
தோன்றுமவன் சம்பா சுரன்பகையை வென்றதுணை
சான்றபுகழ்த் தாயார் தவத்தளித்த நின்வரமே 40
மற்றவன்றன்சேய்மறைத்தவாணனைப்போய்க் கண்ணபிரான்
வெற்றிகொண்டு மீண்டதுவு முன்விரத மெய்ப்பலனே 41
செல்லாச் செருக்கிற் சிரங்கிழிந்த சேடனுக்குப்
பல்லோர் புகழும் படிவரங் னல்கினையே 42
தேடரிய நின்கோயிற் செல்வழியிற் கண்டவொரு
வேடுவனும் விப்பிரற்கு வேண்டுவரம் நல்கினையே 42
பின்னு மவன்றன் பெரும்புருவ மத்தியிலே
துன்னு புழைக்கரமுந் தோன்றும் படியருளிப் 44
பொற்புலவு நேசப் புருசுண்டி யென்றழைத்தாய்
மற்றவன்செய் நோன்பின் மகிமையினுற் றெல்குலத்தார் 45
சென்று மிகவருந்துந் தீய நரகொருவி
நன்றி வளருனது நற்பதவி சார்ந்தனரே 46
சையநெடு மால்வரையின் சாரலினூ ரூராண்ட
மெய்கிருத வீரியனும் நோற்றுமகப் பெற்றனனே 47
செய்யபுகழ்ப் பூமகனுஞ் சிந்தித் துனையிறைஞ்சித்
துய்யதிருக் கோளாய்ச் சுரரமுதும் பெற்றனனே 48

தாழ்வகற்ற நோற்றிருந்த சந்திரற்கு நீயருளிச்
சூழ்கலையி லொன்றைச் சுடர்முடியிற் சூட்டினையே 49
இன்பில் விடைகரமா யேதப் புலைச்சியுமாய்
முன்பிறந்த மூவர்க்கு முத்திநிலை நல்கினையே 50
அன்றெழுந்த பொல்லா வனலா சுரனவனைத்
தின்றெழுந்த தீக்கனலைத் தேவரறு காற்றணித்தாய் 51
மெய்யில் சனகன் வெறுஞ் செருக்கை நீதகர்த்துக்
கொய்து திரிசிரனூர் வையறுகு கொண்டினித்தாய் 52
அன்பன் கவுண்டினிபெண் ணாசிரியை யாட்குமுனம்
இன்ப வறுகி னியற்பெருமை நீகாட்டிக் 53
கற்பகமுந் தேனுங் கவினுலவு முன்றிலின்கண்
அற்புதமாய் நின்று வளர வமைத்தனையே 54
வன்னியிலை வீழ்த்து வனவேட வீமற்கும்
பின்னுமொரு சாம்பற்கும் பேறுபல நல்கினையே 55
விண்டு மனுக்கணித்து வேண்ட விரணியனை
அண்டு மிளவலுடன் கொல்லவருள் செய்தனையே 56
பேரார் பிரிய வரதன் மனை கீர்த்தி
சீராக நின்விரதஞ் செய்துவழி பட்டமையால் 57
மன்னவனு ரன்பும் மகப்பேறு முன்னருளிப்
பின்புதல்வன் சாகப் பெயர்த்துமுயிர்ப் பித்தனையே 58
பொய்யி றவத்துப் புருசுண்டி சாபத்தால்
மெய்யி னிலை குலைந்து மேவுசமி மந்தாரன் 59
நிற்ப விருமரமாய் நீ போய் நிழலமர்ந்து
பொற்பிலையைப் பூவைப் புனிதமுறச் செய்தனையே 60
சாவித் திரிசபிக்கத் தண்ணீராய்ப் போனசுரர்
மேவிப் பழவடிவு மேற்கொள்ள வைத்தனையே 61
பெட்புலவு மெய்க்கிப்பி ரப்பிரசா தப்பெயரான்
மட்புவியி னேற்க வரம்பலவு நல்கினையே 62

வேளனைய கோன்கார்த்த வீரியனு மேவிரும்பி
நாளடைவி னேற்றுவர நல்வரங்க ளீந்தனையே 63
கற்பிழந்த சுந்தரியாங் காமிபுலேச் சேரியிலே
பொற்பிழந்து வந்துதித்துப் பூண்டுதுய ராண்டிருந்தும் 64
மும்முறையுன் னாமம் மொழிந்த முறையதனாற்
செம்மைவிமா னத்திற் செலப்பதவி நல்கினையே 65
அன்னவள்கண் ணேக்கா லமர்ந்தவனி மேற்கிடந்த
பொன்னகர்வி மானமது போந்திடவுஞ் செய்தனையே 66
சீருலவு மன்சூர சேனன் பிரசைகளும்
ஊரொருவி நின்பாலுறவிமா னங்கொடுத்தாய் 67
சென்னிமிசைக் குட்டியவத் தென்னிலங்கை ராவணனைத்
தன்னிருபான் கையாலுந் தன்றலைமேற் குட்டவைத்து 68
நல்லவரம் நல்கினையே நந்தா வனந்தழைப்பச்
செல்லுங் குறுமுனியின் குண்டிகைநீர் சிந்தினையே 69
காசிபனர் கேட்டபடி காதலிமார் தம்வயிற்றில்
ஆசில் சராசரங்க ளன்றுதிக்க வைத்தனையே 70
புத்திரர்போ யொன்றுநான் கைந்தெட்டீ ராருகுஞ்
சித்திதரு முன்மனுக்கள் செப்பிவரம் பெற்றனரே 71
செய்ய மறைவிதியிற் செய்துபல பூசனைகள்
துய்யதவ வானோர் சுமுகரெனப் பேருமிட்டார் 72
ஏதின் முனிவரெலா மேகதந்த ரென்றழைத்தார்
காதற் கபிலரென்றார் கந்தருவர் கிம்புருடர் 73
சாரணருஞ் சித்தர்களுந் தாழ்ந்துகச கன்னரென்றார்
பூரணமா மக்களிலம் போதரரே யென்றழைத்தார் 74
தேர்ந்து பலவிலங்குஞ் சீரார் விகடரெனச்
சார்ந்து பறவைமரந் தாழ்ந்துவிக்ன ராசரெனக் 75
கண்ட நவகோள் கணதிபரே யென்றழைப்ப
எண்டிக்குப் பாலகருந் தூமகே தென்றிறைஞ்சக் 76

கங்கைமுத தீர்த்தங் கணுத்தியட்ச ரென்றியம்பத்
தங்கு சிறுபயிருந் தாழ்கிருமி வண்டுகளும் 77
பற்றமைந்து நற்பால சந்திரரென் றேபரவ
மற்றுயிர்க ளெல்லாங் கசானனரென் றேமகிழ 78
எல்லார்க்கு மன்பா யிசைந்த வரமுதவிச்
சொல்வார்க்கிப்பன்னிருபேர்சூழ்வினைபோ மென்றனையே 79
இன்னு முகந்தோறும் நீபுரிந்த வின்பநலந்
துன்னரிய வாடலெலாஞ் சொல்லுக் கமைந்திடுமோ 80
நின்னடியார் தங்க ளினைவின் படிவடிவம்
மன்னி வரங்கள் மகிழ்வினொடு நல்கினையே 81
ஆண்டோர் கணன்சூறை யாடியசிந் தாமணியை
வேண்டுங் கபிலருக்கு மீட்டுக் கொடுத்தனையே 82
வந்துமையாள் தன்வயிற்றில் மைந்தனாய் நீ பிறந்து
சிந்துரனைத் தேய்த்துத் திலதமா யிட்டனையே 83
பொற்பரசி புட்பகையின் புத்திரனை நீமறைத்து
மற்றவனுக் கீடாய்ப் பரசுவனார் பால் வளர்ந்து 84
தக்க சவுபரியின் சாபத்து மூடிகத்தை
மிக்கதொரு வாகனமாய்க் கொண்டிறுத்தாய் விக்கினனைக் 85
கவ்வைக் கடலிற் கமலா சுரன் மறைத்த
செவ்விமறை யாகமங்கள் சேர்ந்த புராணமெலாம் 86
முக்கண்ணி னின்று முறையுதிப்ப நீபுரிந்தும்
அக்கள்வன் றன்னை யமர்க்களத்திற் கொன்றனையே 87
சிந்துதனைக் கொல்லத் திரிசந்தி சேத்திரத்தில்
வந்துமையின் மாமகனாய் வண்மையொடு பிறந்து 88
துன்றிவந்த வஞ்சகராந் தூதுவரைப் போக்கடித்து
வென்றவனைக் கொன்றினிய விண்ணவரைக் காத்தனையே 89
பாதலத்திற் சென்றுசிறைப் பட்டிருந்த நல்வினதை
காதற் புதல்வரைப்போய்க் காவலான் மீட்டனையே 90

அன்றூர்ந்த பச்சை யழகுமயில் வாகனத்தைக்
குன்றெறிந்த செல்வக் குமரற்கு நல்கினையே 91
தக்கதவ மாதவரா சன்மனைவி யாஞ்சுமுதை
பக்கத்தே கானகத்திற் பாலகனாய்ப் போயிருந்து 92
கொல்லவந்த தூமா சுரனைக் கொலைபுரிந்து
நல்ல வரம்பலவு நல்கிக் கரந்தனையே 93
பார்வதியின் சாபத்தாற் பாம்புருவ மெய்தியமால்
சீர்வகுத்து முன்போற் சிறந்திலக வைத்தனையே 94
அன்றதிதி செய்த வருந்தவத்தி லோர்மகனாய்ச்
சென்றிருந்து தேவாந் தகனை நராந்தகனைக் 95
கொன்றினிய வானோர் குலந்தழைக்க வைத்தனையே
நன்றியிலாத் தானவரை நாசமுறச் செய்தனையே 96
செப்பரிய காசித் திருநகரி லோர்பொழுதில்
ஒப்பரிய வீடுதொறு முற்றுவிருந் துண்டனையே 97
ஐயமெடுத் துண்டுவரு மந்தணனு மங்கொருவன்
செய்துவைத்த புல்லரிசிச் சிற்றுணவு முண்டனையே 98
தேவி திருமுகத்திற் சேயாக நீபிறந்து
தாவித் துராசதனைத் தாளிணைக்கீழ் வைத்தனையே 99
காசி வளநகரக் காவலனை யேமாற்றி
மாசில் சிவனுங்கு வந்தமரச் செய்தனையே 100
மாமறையான் மைந்தன் மரீசி வளர்த்தெடுத்த
காமருபூங் கோதை கவினுலவு வல்லபையைச் 101
செந்திருவி னுறிரண்டு செல்வியர்க ளங்களையும்
முந்தினிய மன்றல் முடித்து மகிழ்ந்தனையே 102
குன்றக் குறவக் குலமகளாம் வள்ளிதனை
அன்றத் தினைப்புனத்தி லச்சமுற நீவெருட்டிச் 103
சென்று முருகோனைச் சேர்ந்திடவுஞ் செய்தனையே
வென்றி பெறுகோமான் விக்கிரமா தித்தன்மனை 104

இன்பமமைந்த செஞ்சொ லிலக்கண சுந்தரியாள்
முன்பியற்று நோன்பை நடுவின் முறித்தமையால் 105
துன்பியற்றிச் சோரவைத்துத் தொன்முறைற்யி னவ்வையினல்
பின்பியற்று விக்கவைத்துப் பேர்வரங்க ணல்கினையே 106
இப்பரிசி னூழிதொறும் நீபுரிந்த வாடல்களை
வைப்பிலெவ ரம்மா வகுத்துரைக்க வல்லவர்காண் 107
பல்லுயிர்க்கு மோருயிராய்ப் பாருலகுக் கோர்தலையாய்
எல்லவர்க்கு மின்னமுதா யென்றுமருள் செய்பவனே 108
அங்கிங் கெனுதபடி யாதியந்த மில்லோனய்
எங்கும் வியாபகமா யெண்ணிறைந்த நெய்போலும் 109
பூவும் புணர்மணமும் பொன்னுமொளி போலுமென
ஆவியென மேவியத்துவித மாய்விளங்குஞ் 110
சோதியனே நற்கருணைச் சுந்தரனே துய்யவனே
ஆதியனே யேழையெனை யாண்டடிமை கொள்பவனே 111
வெற்றி புனைந்த விமலா கணபதியே
ஒற்றை மருப்புடையாய் ஓம்கணே சாயநம 112
ஐயா நினதடியே யூறும் வகையிலனய்
மெய்யாய் வருந்தி வருந்தி வெதும்புவதைக் 113
கண்டோடி வாராய் கனிந்து வரமருளாய்
தொண்டாகி நின்சீர்த் தொழும்பியற்ற வைத்தருள்வாய் 114
வந்திறுதி நாளில் மறுபிறவிக் குய்க்காமல்
தந்தருள்வா யுன்பொற் சரண். 115

**கணேசர் கலிவெண்பா முற்றிற்று.**

---

# இரண்டாவது
# சிவ தோத்திரம்.

## காப்பு.

(கலி விருத்தம்.)

திங்கள் கொங்குயர் தேங்கமழ் கொன்றையுங்
கங்கை யும்படர் காமரு செஞ்சடைச்
சங்க ரன்பத தோத்திரஞ் சாற்றவே
ஐங்க ரன்பதங் காத்தெனை யாளுமே.

## நூல்.

(ஆசிரிய விருத்தம்.)

சீர்கொண்ட தத்துவா தீதபரி பூரணச்
சின்மயா னந்தவடிவாய்ச்
செய்யமலர் மணமென்ன வையகத் தொன்றிநிறை
தேவாதி தேவநிலவுந்
தார்கொண்ட விதழியுஞ் சூழ்கின்ற தாழ்சடைச்
சம்புவே சாம்பசிவனே
சங்கரா தற்பரா நின்மலா வெண்குணச்
சாமியெனை யாளுமிறைவா
பேர்கொண்ட பிரமாதி தேவருக் கரியநின்
பெருமைதான் பேசவெளிதோ
பிழைகள்பல செய்யினுஞ் சிறுவர்களை மன்னித்தல்
பெற்றவர்க் குற்றகடனே
வார்கொண்ட களபமுலை யேர்கொண்ட துணைவியுமை
வளர்கின்ற பாகமுடையோய்
வந்ததுயர் மாற்றியே சிந்தைமகிழ் தற்கினிய
வரமருள்செய் பரமசிவனே. (1)

ஏதேது தீயவினை முற்பவத் தேழையே
னெண்ணு தியற்றியுள னோ
விப்பவத் தவையெலாந் தப்பாது சூழ்ந்துநனி
யேதங்கள் செய்துவரலான்
யாதேனு முய்யவழி காணும னின்சரண
மேதஞ்ச மென்றிரந்தேன்
யாவர்க்கு முதல்வனீ யெவ்வுயிரு முன்னுடைமை
யானுமவ் வுயிரிலொன்றே
தீதேது செய்திருந் தாலும் பொறுத்தருளல்
சிவசிவா நினதுகடனே
திக்கற்ற பாவியேற் கடைநயன கிருபை நீ
செய்திடா தொழிவையானல்
வாதேது செய்திடுவ னேதயவு சிறிது நீ
மனதிடைக் கொண்டிரங்கி
வந்ததுயர் மாற்றியே சிந்தைமகிழ் தற்கினிய
வரமருள்செய் பரமசிவனே. (2)

நின்பெருமை யுணராது கணைதூவு மங்கசனை
நீறெழ விழித்துமப்பால்
நின்றிரதி மன்ருட வன்றுயிர் கொடுத்ததுவு
நின்கருணை யன்றியெதுகொல்
தன்பெருமை பெரிதென்று சந்திர னினைந்துழித்
தாழ்த்திமீண் டிரங்துபணியத்,
தயவுசெய வில்லையோ ராவணன் செய்தபிழை
தன்னையும் பொறுக்கவில்லையோ
முன்னுயிர் பறிக்கவரு காலனை யுதைத்துமார்க்
கண்டற்கு முடிவில்வரநீ
முன்னருள வில்லையோ வன்னவரி லன்பிலெனு
முறையினு லெனையிகழ்ந்து

வன்மைசெயில் யாவர்பாற் சொல்லிமன மாறுவேன்
மகப்பெரு மலடனலவே
வந்ததுயர் மாற்றியே சிந்தைமகிழ் தற்கினிய
வரமருள்செய் பரமசிவனே. (3)

கன்றுபசு வைப்பிரிந் தயலிடம் போயினுங்
கடியபசி யடையு மேல்லை
கதறியழு மாயினுட னேபசு விரைந்துபோய்க்
கசிந்தினிய வமுதமூட்டும்
இன்று நினையான்பிரிந் தின்ப நிலைகாணும
லேங்கிகின் றபயவோல
மிடுகின்ற துன்செவியி லேறுத வாறென்கொ
லென்னன்னை நீயுமலவோ
பன்றிபெறு குட்டிகட் கன்றுள மிரங்கிநீ
பால்கொடுத் தருளவிலையோ
பாவியேன் றுனுமுன் படைப்பிலொன் றல்லவோ
பட்சமேன் னீமறந்தாய்
மன்றினட னம்புரிபொ னம்பலவ தேசிகா
மகேஸ்வரி வணங்குமமலா
வந்ததுயர் மாற்றியே சிந்தைமகிழ் தற்கினிய
வரமருள் செய் பரமசிவனே. (4)

நாடுதொறு முள்ளபல கோயில்சூழ்ந் தேத்திலேன்
னவையிதீர்த் தங்களாடேன்
நற்றவ மியற்றிலேன் மற்றினிச் செய்யுமுறை
நானுமே தொன்றுமறியேன்
தேடியுன் பாதமே கதியென்று நம்பினேன்
சிந்தைமய நீர்க்கவேண்டுஞ்
சிவபிரா னேயுனது தவவடியர் போற்றவசு
செய்யவறி கில்லனெனினும்

பாடுமுறை யறியாத பேதைசொற் கினியவருள்
பாலிக்க வேண்டுமையா
பராமுகஞ் செய்யிலென் பழிநினது பாலதாம்
புன்முறையு மீதுசொன்னேன்
வாடுமன மாறவகை கூடவருள் செய்திடாய்
வானதி பரந்தசடையாய்
வந்ததுயர் மாற்றியே சிந்தைமகிழ் தற்கினிய
வரமருள்செய் பரமசிவனே. (5)

பொய்யமையு மிவ்வுலக பாசத்தி னிலைமையைப்
புந்திமுற் றுணருமாயின்
போகாது பலவழியி னின்றுெண்டை நாடியே
போக்குமைம் புலனெறியில்
ஐயமில நீபிரியு மாடலுக் கோர்முடிவை
யண்டருங் கண்டுதெளியா
ராதலின் பேதையே னுணருமா றென்கொலோ
வையனே யமரருய்ய
வெய்யவிட முண்டநிற் கென்றெருவ னீடுயர்
விலக்குவது மிக்கவரிதோ
வேலைமுக டேறிரவி கண்டபனி நீங்கல்போன்
மெய்யநின் னருள்பிறந்தால்
வையகத் தெக்குறையு மகலாம னிற்குமோ
மனசிறுயர் மருவ வருமோ
வந்ததுயர் மாற்றியே சிந்தைமகிழ் தற்கினிய
வரமருள்செய் பரமசிவனே. (6)

விசையனன் றுனதுசிர முடைபடத் தாக்கினுன்
மீண்டவற் கென்னசெய்தாய்
வேண்டிய வரம்பலவு மாங்கவற் கருளினுய்
விநோதமிஃ தென்னவிகடம்

தசைகுருதி தோனரம் பென்புகொ டமைத்து நீ
தந்தவிக் காயவீடு
தக்கசுக மின்றியே வாடுமுறை கண்டிலாய்
சாமியுன் றயவுமிதுவோ
அசையுமொரு சிற்றணுவு மசைதலுன் ஞணைவழி
யாமென்ப ரறிஞரதனல்
அடியனிடர் யாவுக்கு மையநீ யேமுதற்
காரணனு மாகவிலையோ
வசைகளுனே நாடாம லிதுசமைய மேவந்து
மலவிருளை யகலவோட்டி
வந்ததுயர் மாற்றியே சிந்தைமகிழ் தற்கினிய
வரமருள்செய் பரமசிவனே. (7)

கண்டுனது கோயில்சூழ்ந் தடிபரவி யிருகையாற்
கடிமலர்க ளாய்ந்து தூவிக்
கனிவினெடு பூசனைகள் புரியாத சிறுமையின்
காரணத் தாற்பலிடர்கள்
தண்டமென வந்துசூழ்ந் தென்னைமிக வாட்டலின்
றுங்கவென் வசமதாமோ
சாமியென் மீதுநீ வன்மங்கள் சாதித்தல்
தகுதிபெறு தருமமலவே
பண்டுனது பாதமே தஞ்சமென் றுற்றபல
பாவிகளு முய்யவிலையோ
பழமைபெறு நின்கருணையாண்டுமறை வாயதோ
பரதவிப் பறியவிலையோ
வண்டமிழ் படித்துனது தொண்டரை யடுத்தினிய
மாதவம் பயிலவேண்டும்
வந்ததுயர் மாற்றியே சிந்தைமகிழ் தற்கினிய
வரமருள்செய் பரமசிவனே. (8)

இனியமது ரச்சுவைக் கனிகளுக ராதுவேம்
பின்கனிகொள் காகமெனவே
இசைபெருகு தமிழ்மொழியி னிறைகலைக ளோதாம
லிதரமொழி பயிலுமவர்போல்
மனதுநட வாமலே காத்தெனது சிற்றறிவை
வண்மைகொள வேற்றிவிடுவாய்
மாயவா தச்சமய படுகுழியில் வீழாது
வந்துறுதி தந்துதவுவாய்
புனிதசம யத்தனே நின்பசத்தேபத்தி
பொன்ருது வளர்கவருள்வாய்
பொய்யடியர் குழுவொருவி மெய்யடியர் தம்முறவு
பூண்டுனைப் போற்றவிடுவாய்
வனசமல ரனையமுக மலையரசி பாகனே
மாதவ ரிறைஞ்சுமுதலே
வந்ததுயர் மாற்றியே சிந்தைமகிழ் தற்கினிய
வரமருள்செய் பரமசிவனே. (9)

வண்குதலை பேசுசிறு பாலகன் பசிமிக்க
வாதையான் முறைபிறழ்ந்து
வாய்துடித் தழுதுபல வைதுணவு கேட்பினும்
வாயின்முத் தாடியன்னை
தண்ணமுத மூட்டியே யுண்மகிழ்வ ளன்றிநீ
தள்ளிநில் லென்றுபகராள்
தந்திமுக னொடினைய கந்தனையு முந்துதவு
தந்தையே சாமியடியேன்
உண்ணெகிழ்வி னலுமுள முற்றதுய ராலுமுறை
யொன்றுமுணர் வின்மையானு
மோதுபல வாசகத் தேதுபிழை மேவினு
முளம்பொறுத் தாதரித்தே

வண்மைசெறி நின்கமல தண்மலர்ப் பாதமிசை
மாருத பத்திமருவ
வந்ததுயர் மாற்றியே சிந்தைமகிழ் தற்கினிய
வரமருள்செய் பரமசிவனே. (10)

---

(நேரிசை யாசிரியப்பா.)

வேதமெய்ப் பொருளாய் விரிந்தகன் றோனே
ஓதுமெய்ப் பிரணவ வோம்நம சிவாய
நாதங் கடந்த நற்பெருங் குருவே
பாதம் படிந்த பனிமலை யவனே
விண்ணொடு மண்ணின் விழுமிய பொருளே
கண்ணுத லுடைய கருணையங் கடலே
சிந்தையி னிடத்துத் திரண்டெழு மமுதே
புந்தியி னிடத்துப் பொலிந்தெழு முணர்வே
வந்தனை யேற்க வந்துநிற் பவனே
பந்தமுற் றகற்றிப் பதமருள் பவனே
கந்தனை யைந்து கரத்தனை யுதவு
தந்தையு மான தயாபர முதலே
அந்தமு நடுவு மாதியு மில்லாச்
சுந்தர மிக்க சுடரொளி விளக்கே
மான்மழு வேந்தும் மலர்க்கரத்தோனே
வான்வளர் கங்கை மதியர வுடனே
தேன்மலி கொன்றை திகழணி சடையாய்
பான்மொழி யுமையாள் பணிசிவ புரனே
வானே நிலனே வளிதீ புனலே
ஊனே யுயிரே யுயிர்க்குயி ரனையாய்
நானே யுன்புகழ் நவில்செயு மாறென்

கோனே மனதிற் குடியிருப் பவனே
வழிபடு மடியார் மனவிழை வெல்லாம்
பழமையி னல்கிய பரிசுகள் மறவேன்
ஆயிர மலர்கொண் டருச்சனை யாற்றும்
மாயவன் குறைந்த வொருமலர்க் கிணையாய்க்
கண்மலர் பறித்திடக் கண்ணனென் றியம்பி
வண்மைகொள் சக்கரப் படையும் வழங்கினை
பூவுல கெல்லாம் போற்றுசுந் தரனும்
நாவலூர்ப் பிறந்த நம்பியா ரூரன்
மேவிய திருமணக் காவணங் குறுகி
ஆவணங் காட்டி யடிமைகொண் டருளினை
பித்தனென் றுங்கவன் பேசிய வசைமொழி
வைத்திசை பாடி வழிபடச் செய்தனை
பத்திகொ ளதிகைப் பாங்கரி லோங்கிய
சித்த வடமெனுந் திருமடந் தனிலே
அடைந்துகண் ணுறங்கு மமையம் நோக்கிப்
படர்ந்தொரு கிழவப் படிவ முடனே
ஒருமுறை யிருமுறை சிரமிசை படிய
அரியயன் காணு மலர்ப்பத மழுத்தினை
திருவா ரூர்க்குச் செல்லப் பணித்து
மருவார் மன்றற் கோலம் வகுத்தனை
பனிமலர்க் கோதை பரவை பாலவன்
மனமுறச் செய்து மணமுடிப் பித்தனை
குண்டையூர் தன்னிற் கொடுத்தநெற் குவையை
எண்டகு மாரூர்க் கேகச் செய்தனை
திருப்புக லூரிற் செங்கற் றலையணை
விருப்புறு பொன்னாய் விளங்கச் செய்தனை

திருமுது குன்றத் தளித்தசெம் பொன்னை
மருமணி முத்தா நதிவிடுத் தாரூர்ப்
பொய்கையி லெடுக்கப் புரிந்தனை யப்பால்
மெய்களைப் படைய மேவிய நெறியில்
தண்ணீர்ப் பந்தர் தய்வொடு வைத்தாங்
குண்ணீர் பொதியமு துதவிக் கரந்தனை
கச்சூர் தன்னிற் கடும்பக னடந்து
பிச்சைகொண்டவன்றன் பெரும்பசி தணித்தனை
தையலர் சிகாமணி சங்கிலி மீது
மையல்கொண் டிருப்ப மகிழ்மரத் தடியில்
சத்திய வாக்குத் தருகென வாங்கி
வித்தகற் கவளை விருப்பொடு நல்கினை
சத்தியந் தணந்தூர் தணந்தவந் நாளில்
மித்திரன் கண்ணொளி விலக்கிமீண் டளித்தாய்
ஊடிய பரவையை யொருமனப் படுத்த
நாடிநள் ளிரவிற் றூதுநீ நடந்தாய்
தில்லைவா ழந்தணர் திறந்தனை விரிப்பச்
சொல்லுயர் பதிகஞ் சொற்றிடச் செய்தனை
பூண்டியூர் நோக்கிப் போகுமவ் வழியில்
ஆண்டுபூ தங்களா லரும்பொருள் கவர்ந்தனை
அப்பொருள் யாவையுங் கோபுர வாயிலிற்
றப்பறக் குவித்துச் சரிவரக் கொடுத்தாய்
குளங்குளி திருப்புக் கொளியூர்ச் சிறுவனை
விழுங்கிய முதலையான் மீட்டிடச் செய்தாய்
இவ்வகை சுந்தரற் கினியன புரிந்து
பவ்வமி லிறுதியிற் பதவியுங் கொடுத்தனை
கோலமண் ணோட்டைக் கொடுத்து மறைத்து

நீல கண்டனார் நிகழ்த்திய சபதம்
வழுவுற மனைவி மலர்க்கரம் பற்றிப்
பழுதறு சத்தியம் பண்ணுவித் தாண்டாய்
இயற்பகை மனைவியை யீந்திட வேற்று
வியத்தகு பத்தியை விளக்கிக் காட்டினை
குற்றமி லிளையான் குடிமாறன்றன்
நற்றகு நிதியற நல்குர வேற்றி
அதிதிபோற் சென்றாங் கந்நிலை தனினும்
உதவிசெய் முறையை யுலகிற் காட்டினை
நின்னடி யான்போ னேர்ந்தொரு பகைவன்
மின்னிய வாள்கொடு வீசலின் வீழ்ந்த
மெய்ப்பொரு ளாயன் மேவற் கிசைந்த
செப்பரு முன்பதஞ் சீர்பெற வளித்தாய்
தூய தொண்டரைத் தொழுவிறன் மிண்ட
நாயனை யடியர் நாயக மாக்கினை
மெய்யமர் நீதி நாயன் வியப்பத்
துய்யநல் லாடை துலைதனி லேற்றினை
சிவகாமி யாண்டா னெறிபத்த னென்போர்
தவவியல் மலர்பறி தந்தியால் விளக்கினை
பாணிற நீற்றார் பகைவர்க் குடைந்த
ஏனாதி நாயர்க் கிசைபத மளித்தனை
வேடுவ திண்ண னெச்சிலை விழைந்து
சூடிய மலர்கொடு சூடப் பெற்றும்
வாயுமிழ் நீரான் மஞ்சன மாடியும்
பாயொளிக் கண்மலர் பறித்திடப் பண்ணியும்
உருக்கமுற் றேகண் ணப்பவென் றோதி
அருட்சிவ கோசரிக் கன்பியல் காட்டினை

குங்கிலி யப்புகை கொடுத்தடி பரவும்
பங்கமில் கலயர்க்குப் பலநிதி கொடுத்தனை
மருங்கினிற் சாய்ந்து மன்னர் கசையா
துரங்கொளு மிலிங்க முயர்த்தினை யவனால்
கஞ்சா றூரன் காமரு புதல்வி
மஞ்சார் குழலறுத் தேற்றபின் வழங்கினை
பூசைத் திரவியம் பூமியிற் சிதறச்
சாதற் கெண்ணிய தாயனார்த் தேற்றினை
அழகிய வாயர் குலத்தினா நாயன்
குழலிசை கேட்டுக் குளிர்ந்தருள் கொடுத்தாய்
சந்தன மிலாமையிற் றன்கர மரைத்த
அந்தமூர்த் திக்குப் பாண்டிநா டளித்தனை
நித்தமு நால்வகைப் பூவெடுத் திறைஞ்சும்
பத்திகொள் முருகனைப் பதவியிற் சேர்த்தனை
உருத்திர மந்திரங் குளத்திருந் தோதும்
திருத்தகு பசுபதி தனைப்பதஞ் சேர்த்தனை
இழிகுல மென்றுள் ளிரங்கிய நந்தனை
அழல்புக வைத்துன் னடிநிழல் சேர்த்தனை
வண்டுகில் கழுவும் வரமுயர் குறிப்புத்
தொண்டரி னன்பைச் சோதனை செய்தனை
விசார சருமன் விழைவுட னாற்றும்
உசித பூசனை யுளமகிழ்ந் தேற்றுத்
தொண்டருக் கரசாய்த் துதிபெற் றிலங்கச்
சண்டே சுரப்பதந் தயவொடு வழங்கினை
புத்த மதம்புக் கியமரு ணீக்கியை
மெத்திய சூலையின் மெலிவுறச் செய்தனை
பின்னுனை வேண்டப் பெருஞ்சுக நல்கி

அன்புட னுவுக் கரசென வழைத்தாய்
மாற்றல ரவனை வதைக்க முயன்று
நீற்றறை புகுத்த நீயே காத்தனை
ஆவியு ணஞ்சை யமுத மாக்கியும்
ஏவிய தந்தியை யிடையச் செய்துங்
கற்றூ ணுடனே கடன்மிசை மிதப்ப
நற்றுணை யிருந்து நயம்பல செய்தனை
பரமபதம் புகுந்த பழிதொலைத் திடுவான்
இருகுறி புயத்தி லிலங்கச் செய்தனை
திங்களூர் தன்னிற் றிருப்புக ழோதப்
பொங்கர விறுத்த புதல்வனை யெழுப்பினை
கயிலையி னிகழுங் காட்சியை மற்றோர்
அயலிடந் தன்னி லவன்பெறக் காட்டினை
பூட்டி யிருந்த பொற்கத வதனைப்
பாட்டிற் றிறக்கும் படியருள் செய்தனை
சுந்தர வரரம்பையர் சூழ்ந்து மயக்கச்
சிந்தனை குலையாத் திறந்தெரி வித்தனை
சமயப் போரிற் றாழ்ந்த சமணர்
அமரக் குலச்சிறை யார்கழு வேற்றினை
மிழலைக் குறும்பன் விரும்பிய படியே
பழுதகல் பதவி யோகத் தளித்தனை
புரைதவிர் புனித வதியுனை வேண்டத்
திருவளர் மாங்கனி செங்கையிற் சேர்த்தனை
இங்கவ ளாகம் விரும்பிய படியே
பாங்குற மாற்றிப் பலவர முதவினை
அப்பரி னிதமு மன்புடை யடியான்
அப்பூதி நாயற் கரும்பத மளித்தனை



நீல நக்கன் வழிபடு லிங்கம்
மேலொரு சிலந்திவீழ்தலு மவன்றன்
மனையவள் கண்டு வாயா லூதச்
சினமொடு துரத்தினன் சென்றுநீ தேற்றினை
ஏமப் பேரு ரிருபிறப் பாளன்
நாமஞ் சொல்லி னமிநந்தி யென்பான்
நீரா னிறைவிளக் கேற்றுநெறியினற்
காரூர்ப் பிறந்தா ரருமை காட்டினை
தேவியைக் கொண்டு தீம்பால் பெய்து
கூவிய பிள்ளை கொண்டுணக் கொடுத்தாய்
அன்னவற் காளுடை பிள்ளைசம் பந்தன்
என்னு மிருபெய ரிலங்கச் செய்தனை
வித்தக மாறன் பாடியி லவர்க்குச்
சித்திர முத்துச் சிவிகை கொடுப் பித்தாய்
கொல்லி மழவன் குமாரி கொடுநோய்
சொல்லிய பாவிற் றொலையச் செய்தனை
திருக்கொடி மாடச் செங்குன் றூரை
வருத்திய நளிர்சுரம் மாற்றிடச் செய்தாய்
ஆதப வெப்ப மவித்திடப் பந்தர்
பூத கணங்கள் போயிடச் செய்தாய்
அன்புயர் திருவா வடுதுறை யதனில்
பொன்மிக வழங்கும் பொற்கிழி கொடுத்தாய்
பாதகப் பாம்பா ற்பட்ட வணிகனை
ஓதிய பாவா லுயிர்பெறச் செய்தனை
திருச்செங் காட்டி னுருப்பெறு கோலம்
விருப்பமர் மருகற் கோயிலின் விளக்கினை
மழைகுறை வீழி மிழலையிற் பஞ்சம்

ஒழியும் வரையும் படிக்கா சுதவினை
பாண்டியிற் சமணர் மூட்டிய கனலை
வேண்டிய படியே வேந்தற் குய்த்தனை
நீற்றுப் பதிகம் நேர்பட நின்று
சாற்றவு மக்கனல் தணியச் செய்தனை
வாதோ டிருமத நூலெரி வைப்பக்
கோதார் சமண வேட்டைக் கொளுத்தினை
வைகை யெறிநீர் மாவே டேறச்
செய்துன் சமயத் திறமை தெரித்தனை
புத்த நந்தியின் பொன்முடி தெறித்து
வித்தக னுரையின் வீழ்ந்திடச் செய்தாய்
மயிலாப் பூரில் வாழ்சிவ நேசர்
செயுமா தவத்திற் செனித்தபூம் பாவை
என்பவ டுஞ்சி யெரிந்தபி னெஞ்சிய
என்பு சாம்பரை யெழுப்பிடச் செய்தாய்
இன்னணம் வேண்டிய வெல்லா முதவி
அன்னவன் கலப்பச் சோதியு மாயினை
சுந்தரன் மீது கலிக்காமற்கு
வந்தகோபத்தை மாற்றிநட் பாக்கினை
தடமலி சந்தனூ ரிடையனும் மூலன்
உடலிடை புகுந்த வொருபெரும் யோகி
தன்னுடல் மறைத்துச் சைவநூன் மந்திரம்
முன்னுயர் மூவா யிரமொழி வித்தனை
தடாக மகழூந் தண்டி யடிகள்
படர்குரு டகலப் பார்வை நல்கினை
சூதா னுழைத்துத் தொண்டரை யோம்பும்
மாதவ மூர்க்க நாயனைப் புரந்தாய்

தேறியைக் தெழுத்தைச் செப்புசோ மாசி
மாறன் றனக்கு மலர்ப்பத முதவினை
கற்கொடு லிங்க மெற்றுசாக் கியர்க்கும்
பொற்புறு பதவி பொலிவுறக் கொடுத்தாய்
அறத்தகு மடியார்க் கடிமைசெய் தொழுகுஞ்
சிறப்புலி நாதன் பெறப்பத மருளினை
திருச்செங் காட்டிற் செவ்விதி னடந்து
விருப்பங் காட்டி விருந்தின ளுகி
அறமுடை யான்சிறுத் தொண்டர்தம் மனையில்
சிறுவனை யரிந்து கறிசெய வைத்தும்
மீண்டுயிர் பெறவைத் தாண்டனை வருக்கும்
காண்டகு பதவி களிப்புற நல்கினை
தீதற வணங்குஞ் சேரமான் றனக்குப்
பாதச் சிலம்பொலி பரிவொடு காட்டினை
பாணபத் திரற்குப் பலநிதிகொடுப்ப
வேணுமென் றுங்கோர் திருமுகம் விடுத்தனை
சுந்தர னுடனே வந்துறக் கைலையில்
அந்தமி லின்ப வாழ்வங் கருளினை
கொய்மலர் தூவிக் குறைதவிர் பூசனை
செய்கண நாதர்க் கருளினை திருப்பதம்
களந்தையூர்க் கூற்றுவன் கவின்முடி சூட்ட
வளந்திக ழுன்சீர் மலரடி வழங்கினை
வந்தனை செய்த புலவோர்க் கிரங்கிப்
பைந்தமிழ்ச் சங்கப் பலகையு நல்கினை
புன்சடைக் கிரங்கிப் பொங்கனல் வீழ்ந்த
மன்புகழ்ச் சோழற் குன்பதம் வழங்கினை
நீறணிந் தொருவ னேர்பட வன்ஞேன்

மாறிழி நிலையின் மனவெறுப் பின்றி
அருநிதி வழங்கிய நரசிங் கமுனை
அரசன் றனக்கு மரும்பத மளித்தனை
பொன்மீன் காட்டிப் புகழதி பத்தன்
அன்பா ருள்ள மளவிட் டறிந்தனை
புனல்தர மறுகிய மனையவள் பொற்கரஞ்
சினமொடு கொய்துந் திறம்பா தடியவர்
பூசனை முற்றிய புகழ்கலிக் கம்பன்
நேச வுறுதியை நிலமிசைக் காட்டினை
குறைத்துன் புகழைக் கூறுவர் நாவை
அறுக்குஞ் சத்திய னன்பியல் காட்டினை
காடவர் கோனுன் கருணைமீக் கொண்டு
பாடிய திருவெண் பாவுக் கருளினை
அரித்தபுல் லெரித்து மதுபற்றாமல்
திருத்துதன் முடியைத் தீயிலிட் டெரித்து
நின்பணி முடித்த நெறிகணம் புல்லன்
றன்பெரு மன்பைத் தரணியிற் காட்டினை
கொற்றவர் மகிழக் கோவைகள் பாடிப்
பெற்றவை யாவும் பெரியவர்க் குதவிய
நற்றவக் காரி நன்மனம் போலப்
பெற்றிடக் கைலையிற் பெரும்பத மளித்தாய்
ஞானசம் பந்தன் கைத்திரு நீற்றால்
கூனெடு மாறன் கூனை நிமிர்த்தினை
வாயிலா ராற்றும் மானத பூசையை
நேயமோ டேற்று நிறைபத மருளினை
பொருதுழை பொருளா லடியவர்க் கமுதிடும்
அருமுனை யடுவார்க் கரும்பத மளித்தனை

காதலி கரங்கொய் கழற்சிங் கன்றன்
ஆதர வளவை யவனியிற் காட்டினை
செந்நெற் றிருட்டுச் சிவனடி யார்பொருட்
டென்னனும் பொறுத்த விடங்கழிக் கருளினை
ஆலயத் தொருமலர் மோந்த வாயிழை
சீலமூக் கரிந்த செருத்துணைக் கருளினை
மஞ்சன மாட்டும் புகழ்த்துணை நாயன்
பஞ்சந் தவிர்க்கப் படிக்கா சுதவினை
அடியவர் தமக்குத் திருவமு தமைக்கும்
படியுள நெல்லைப் பந்தின மெடுப்ப
வாட்கொண் டவரை வதைத்துயிர் போக்கிய
கோட்புலி தனக்குங் கொடுத்தனை பெரும்பதம்
பொற்புயர் சிந்தையிற் பூசலார் வகுத்த
அற்புதக் கோயிலி னமர்ந்தருள் செய்தனை
மாறன் மனைவி மங்கையர்க் கரசியால்
வீறுஞ் சைவம் விரிந்திடச் செய்தனை
அணியுடை செய்துன் னடியவர்க் குதவும்
இணைதவிர் நேசற் கிரும்பத முதவினை
சந்திர தீர்த்த மருங்குயர் சோலையில்
வந்தொரு நாவன் மரநிழ லிருந்தனை
தந்தியுஞ் சிலந்தியுந் தாழ்முறை கண்டு
முந்துறு பிறப்பும் முத்தியு நல்கினை
யாழிசை கூட்டிப் பதமல ரிறைஞ்சும்
வாழ்வுயர் நீல கண்டன் றனக்குப்
படரொளிப் பைம்பொற் பலகையு முதவி
முடிவினி லின்ப முத்தியு நல்கினை
சுந்தர மூர்த்தியைச் சுதனெனப் பெறுதலின்

தந்தையாஞ் சடையனுந் தாயிசை ஞானியும்
நிறைவுறு வாழ்வு நிலமிசை மருவி
இறுதியி னின்பத மெய்திடச் செய்தனை
திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்து
விருப்பொடு வாத வூரர்க் கருளினை
நரித்திரள் கூட்டி நவையற் றிலங்கும்
பரித்திர ளாக்கிப் பாண்டியற் குய்த்தனை
வைகைமா நதியை மதுரையிற் பெருகச்
செய்தடி யான்புகழ் திகழ்தரக் காட்டினை
வந்துபிட் டேற்று மண்சுமந் தாங்கே
பிந்திய பணியாற் பிரம்படி வாங்கினை
மண்ணின ரின்னும் மகிழ்பெற வூமைப்
பெண்வாய் திறந்து பேச வைத்தனை
அன்புற வோதிய தோத்திர மனைத்தும்
இன்புற வேட்டி லெழுதிக் கொடுத்தனை
விரிந்துவில் லுமிழும் மெய்ச்சுட ராகிக்
கரந்தவ னுய்யக் கருணை காட்டினை
மற்றுமிவ் வாறே வழிபடு மடியர்
சொற்றொகைக் கடங்காத் தொகையினர் புவிமேல்
வேண்டிய வேண்டிய விருப்பெலா நல்கி
ஆண்டாண் டருளிய வதிசய மெளிதோ
சந்தி கேந்திரந் தனிலுமை யாளுடன்
அந்தணர் மத்தியி லமர்ந்த கோலமும்
தாரு காவனத் தவமுனி வரர்தம்
பாரியர் கற்பீ டழித்தவப் பரிசும்
வையக மதிப்ப மாதுலன் றெடுத்துச்
செய்தமா மகத்தைச் சிதைத்த திறமையும்

பூங்கணைக் காமன் பொன்ற விழித்தபின்
ஆங்குயிர் பெருமா றருளிய கிருபையுங்
காவென வருமார்க் கண்டனுக் கிரங்கி
மேவிய காலன் விழவுதைத் ததுவும்
அருணா சலத்தி லழற்பிழம் பாகி
இருபேர் மத்தியி லெழும்பிய விநோதமும்
அழுக்கா றில்லா வடியவர் வியப்பக்
கழுக்குன் றேறிக் காட்டிய கோலமும்
வாகமர் மகேந்திர மாமலை தன்னில்
ஆகமந் தோன்ற வருளிய பெருமையும்
மறுகுக டோறும் மாறுருக் கொண்டு
விறகுகட் டேந்தி விலைபகர்ந் தமையும்
வேடுவன் போற்போய் வில்லிகைச் சிலையாற்
சாடிய வடியைத் தாங்கிய தன்மையுந்
தேவர்க ளச்சந் தீர்த்திட வேண்டி
மேவலர் புரமூன் றெரித்த விநோதமும்
பித்தர்போற் சுடலையிற் பேயுடன் கூடித்
தித்திமி யென்று நடம்பயில் திறமையும்
எல்லையு முருவமு மில்லா னாகியுந்
தொல்லை மாநிலத் தொண்டருக் கருள்செய
ஆயிர மாயிர மளக்கரு கோலம்
மேயின புதுமைகள் விள்ளவுந் தகுமோ
கற்பக தருவைச் சாந்தவர் கலிதான்
நிற்பது மெங்கே நிமலா நின்பெரும்
பங்கய நறுமலர்ப் பாதந் துணையென
அங்கைகள் கூப்பு மடியேன் றுயர்பிணி
தடுப்பது மரிதோ தயாபர போற்றி

அடுத்தார்க் கினிய வமுதே போற்றி
சித்தத் துறையுந் தேவே போற்றி
பத்தர்க் குதவும் பரனே போற்றி
நல்லார் பரவும் நாதா போற்றி
எல்லாம் வல்ல இறைவா போற்றி
மெய்யா போற்றி விமலா போற்றி
ஐயா போற்றி யரசே போற்றி
போற்றி போற்றியென் புந்தியைத்
தேற்றி யருளுதி சிவபெருமானே

வேறு.

விண்ணெலாங் கடந்து வெளியெலாம் பரந்து
வேறுவே றுருகுபல் லண்டக்
கண்ணெலா நிறைந்த கருணையங் கடலே
கைதொழு திறைஞ்சியே கருத்தில்
எண்ணுவா ரெண்ணத் திசைந்தெழு மினிய
வின்பமே சிவபெரு மானே
அண்ணலே யபய மபயமென் றிரந்தே
னாதரித் தென்னையாண் டருளே (1)

உய்யுமா றுணரா துருக்குநோ யதனா
லுடம்பெலாந் தளர்ந்துநெஞ் சுருகி
மெய்யனே விமலை பாகனேநின்னை
வேண்டியே வெம்பிநின் றழுது
செய்யுமென் னோலஞ் செவிபுக விலையோ
செல்வமே சிவபெருமானே
ஐயனே யபய மபயமென் றிரந்தே
னாதரித் தென்னையாண் டருளே (2)

தப்பெலா நிதமு மிழைப்பதே யன்றித்
தருமநன் னெறிபயின் றறியேன்
செப்புமா றறியேன் சிந்தையி னினையேன்
திருவடி பரவவு மறியேன்
வைப்பிலென் செய்கேன் வானவர்வணங்கும்
வள்ளலே சிவபெருமானே
அப்பனே யபயம பயமென் றிரங்தே
ளுதரித் தென்னையாண் டருளே (3)

இமயமால் வரையோ யளியினன் யார்க்கும்
பயன்படா திங்கிலங் தனக்கோர்
சுமையெனக் கிடந்து துயர்க்கடன் மூழ்கு
தோதகங் கண்டிரங் கிலைநீ
தமரெலா மிருந்து மென்னதாஞ் செய்வர்
சாமியென் சிவபெரு மானே
அமலனே யபய மபயமென் றிரங்தே
ளுதரித் தென்னையாண் டருளே (4)

வேதநா யகனே விண்ணவர் தலைவா
மெய்ப்பழம் பொருளென விரிந்த
சோதிநா யகனே சூழ்வினை துடைத்தென்
றுயர்க்கட றூலைத்திடா யென்னில்
வாதியா னேது செய்யவல் லவனோ
வன்மமேன் சிவபெரு மானே
ஆதியே யபய மபயமென் றிரங்தே
ளுதரித் தென்னையாண் டருளே (5)

பத்தனு யுனது பணிபுரி கில்லேன்
பாவியேன் பழவினைத் தொடர்பால்

மெத்திய வறுமை பிணிதுயர் பலவும்
மேவலின் மிகவுள மெலிந்தேன்
வித்தகா நீயே துணைமறு தஞ்சம்
வேறிலேச் சிவபெரு மானே
அத்தனே யபய மபயமென் றிரந்தே
னுதரித் தென்னையாண் டருளே (6)

பாரெலா மடர்ந்த பாசமே சூழ்ந்து
பற்றலாற் பரமனே யுனது
சீரெலா முற்ற திருவடி மலரைச்
சிந்தையிற் றிடமுற விருத்தும்
பேரவா வில்லே னுய்யுமா றெங்ஙன்
பிழைபொறுய் சிவபெரு மானே
ஆரணு வபய மபயமென் றிரந்தே
னுதரித் தென்னையாண் டருளே (7)

முன்பியான் செய்த பாவமே தொடர்ந்து
முருக்குவ திம்முறை யென்றால்
பின்பியான் றொழுது பரதவித் தழுது
பிழைபொறென் றிரங்கலிற் கிருபை
என்பதொன் றுன்பா லில்லையோ வேழை
யென்செய்கேன் சிவபெரு மானே
அன்பனே யபய மபயமென் றிரந்தே
னுதரித் தென்னையாண் டருளே (8)

தந்தைதாய் துணைவர் யாவுநீ யென்று
சரதமாய் நம்புநா யேற்கு
வந்துநீ கருணை வழங்கிடா யென்னின்
மற்றியான் செய்வதொன் றுளதோ

சிந்தைமாட் டுள்ள துயரெலா மெவர்க்குச்
செப்புகேன் சிவபெரு மானே
அந்தணு வபயமபயமேன் றிரந்தே
னுதரித் தென்னையாண் டருளே (9)

செங்கண்மா லாதி தேவருக் கரிய
திருமலர்ச் சேவடிக் காளாய்
அங்கையான் மலர்க ளாய்ந்திறைத் தேத்து
மச்சமு மன்புமெற் கமையத்
திங்களார் சடையாய் செய்திடாய் துன்பந்
தீர்த்திடாய் சிவபேரு மானே
அங்கணு வபய மபயமென் றிரந்தே
னுதரித் தென்னையாண் டருளே (10)

சிவதோத்திரம் முற்றிற்று.

---

## மூன்றாவது

## யாழ்ப்பாணத்து

# அரசடி விநாயகர் அகவல்

சீர்பொலி கமலத் துறைதிசை முகனுங்
கார்பொலி மேனிக் கண்ணனுங் காணாப்
பரசிவ னுதவிய பால கணேச
அரசடிக் கோயி லமர்ந்திருப் பவனே
வித்தக விநாயக வேழமா முகத்தோய்
சித்தி புத்தியர் திருமண வாளா
ஓமெனும் பிரணவத் துள்ளுறை பொருளே
காமரு வடிவக் கற்பகப் பிள்ளாய்
பன்னரு சராசரப் பகுப்புக ளனைத்துந்
தன்வயி னடக்குந் தனிமுத லரசே
எல்லா விடமு மெய்ப்பொருட் கண்ணுஞ்
சொல்லார் பொருளின் சூழ்ந்திருப் பவனே
மாதுமை பக்கம் மகனென வந்து
காதற் குதலைக் கனிமொழி பகர்வோய்
திருமா லவற்குச் சிறந்தநன் மருக
முருகோன் றனக்கு முன்வரு துணைவ
வல்லபை தனையும் மாமகள் பயந்த
சொல்லரு பன்னிரு தோகையர் தமையும்
முறைமுறை மன்றல் முடித்தநா யகனே
பிறையன வொற்றைப்பெருமருப் புடையோய்
நின்பெரும் புகழை நிகழ்த்தவு நின்னருட்
கன்பொடு பூசனை யாற்றவு மறியாப்
பாதக மிக்க பாவியேன் றனக்குக்
காதலாய்ச் சிறிதுன் கடைக்கண் கணித்துப்

பவமெலா மறுத்துப் பழவினை கடிந்து
தவவழி சேரத் தயவுகூர்ந் தருளி
ஐயநின் பதமே லகலா வன்பும்
மெய்மைய பத்தியு மேன்மேல் வளர்தரப்
பில்லி சூனியம் பேதக மாரணம்
பல்வகைத் தோடம் பகைபழி முதலாந்
துன்பமுந் துயருந் தொலைந்தகன் றோட
இன்பமுஞ் சுகமு மென்றுமுள வாக
நெஞ்சகந் தனினீ நிலையா யிருந்து
வஞ்சக மனத்தின் மயக்கெலா மறுத்துக்
கல்வியு ஞானமுங் களத்திர சுகமுஞ்
செல்வமும் புகழுஞ் சிறந்தநல் லாயுளும்
மனமகிழ் தருநன் மைந்தர்ப் பேறும்
அனபல வரமு மன்புட னல்கி
அந்தியத் துன்சீ ரடிநிழற் பதவியுந்
தந்தெனை யாள்வாய் தயவுகூர்ந் தைய
விக்கினந் தீர்க்கும் விநாயக சரணம்
முற்கலர்க் கருளிய முதல்வா சரணம்
அந்தமு மாதியு மில்லாய் சரணம்
சிந்தையி னிறையுந் தேவே சரணம்
வடதரு நீழல் வதிபவ சரணம்
குடவயி றுடைய கோவே சரணம்
மோதக மப்ப முதற்பல காரங்
காதலி னுகருங் கணபதி சரணம்
பங்கய னாதி பண்ணவர் பரவுஞ்
சங்கரன் மகனே சரணஞ் சரணம்
இருநிலஞ் சுமக்குஞ் சேடனை யெடுத்து
அரைஞா ணாக வணிந்தவ சயசய
பாம்புரு வாகப் பச்சைமால் பெற்ற
சாம்பவி சாபந் தவிர்த்தாய் சயசய

கொடியாய்க் குறுமுனி குண்டிகைப் புனலைப்
படிமேற் கவிழ்த்த பாலக சயசய
சிந்துரற் செறுத்த திறலோய் சயசய
சந்திரன் செருக்கைத் தகர்த்தாய் சயசய
பகைத்தெதி ரசுரரைப் படுத்தாய் நமநம
சகத்திர நாமந் தரித்தாய் நமநம
மறைமுகத் திலகும் மனுவே நமநம
குறைதவிர்த் தாளுங் குருவே நமநம
வெருவுற வள்ளிமுன் விரைந்தாய் நமநம
தெருளுறச் சனகனைச் செய்தாய் நமநம
கயிலையி னிறைதரு கணாதிப போற்றி
மயிலொடு மூஷிக வாகன போற்றி
அடியவர்க் கென்று மருள்வாய் போற்றி
படிமுழு தாளும் பதியே போற்றி
ஆயிற் சிறந்த வன்பா போற்றி
நாயேற் கிரங்கும் நம்பா போற்றி
சிந்தா குலங்க டீர்ப்பவ போற்றி
எந்தாய் போற்றி யிறைவா போற்றி
அருமை யின்ப வமுதே போற்றி
தெரிபவ ருள்ளத் தெளிவே போற்றி
துவட்டா தொளிருஞ் சுடரே போற்றி
தெவிட்ட வினிய தேனே போற்றி
கருணைசெ யின்பக் கனியே போற்றி
அரசே போற்றி யமலா போற்றி
சயசய போற்றி சாமி போற்றி
நயமுறப் போற்றி நவையறப் போற்றி
போற்றி போற்றிநின் பொற்பா தப்புகழ்
சாற்றுவ ரென்றுந் தழைத்துவாழ் குவரே.

யா-அரசடி விநாயகர் அகவல் முற்றிற்று.

## நான்காவது

# சிவமாலை

### காப்பு

பன்னிரு விருத்தப் பாமலர் தொடுத்துப்
பின்னியோர் மாலை பிறையணி சிவனார்
பொன்னடிக் கணியப் பொருவில்
முன்னவன் வேழ முகன்பதங் காப்பே

### நூல்

அண்டர்கள் பரவு மாதிநா யகனே
யன்பினில் விளைந்தவா ரமுதத்
துண்டமே கனியும் பாலொடு தேனுந்
தோற்றிடத் தித்திக்குஞ் சுவையே
விண்டுவு மயனுந் தேடியுங் காணா
விமலனே சிவபெரு மானே
தெண்டனிட் டுன்னைக் கூவிநின் றிரக்குஞ்
சிறியனேற் கருள்புரி வாயே (1)

ஆயினு மினிய தயவுகூர்ந் தருளு
மையனே யருட்பெருங் கடலே
நேயமே யுருவா யிடந்தொறு நிறைந்த
நின்மலா வடியவர் நெஞ்சக்
கோயில்கொண் டருளிக் குறைதவிர்த் தாளுங்
குரவனே சிவபெரு மானே
நாயினேன் செய்த பிழையெலாம் பொறுத்து
நலஞ்சிறி தருளுக வினியே (2)

இனியதாய் தந்தை யொடுந்தமர் பல்லோ
　　ரெனைப்பிரிந் தேகிவிண் புகுதத்
தனியனாய் நின்று தவித்தழு வேற்குத்
　　தயவுநீ தந்திடா யானால்
நினதரு ளதுதா னிருந்தவா றென்னே
　　நின்மலா சிவபெரு மானே
மனதினி னினைந்து வந்தெனைக் காக்க
　　மற்றியா ருண்டுகொ லீண்டே (3)

ஈண்டிய வமரர்க் கிடையிடை விளைந்த
　　விடரெலா மறுத்திதங் கொடுத்த
ஆண்டகை யொருவ னீயெனப் புவியோ
　　ரறைவதும் பொய்மைய தாமோ
வேண்டுநர் வேண்டு மவையெலா முதவும்
　　விமலனே சிவபெரு மானே
தாண்டவ முதலே தமியனுக் குதவத்
　　தயவிலாத் தன்மையே துரையே (4)

உரைகொடு நின்சீர் விள்ளுதற் கியலே
　　னுள்ளமேல் வைத்துனை யேத்திப்
பரவுமா றதுவு மறிகிலேன் சிறிதும்
　　பரமனே பண்ணவர்க் கரசே
கரையிலா வின்னற் கடல்படிந் துழலுங்
　　கடையனேன் றனக்குநீ யிரங்கி
வரமொரு சிறிது வழங்கிடா யானால்
　　வந்தெனை வருத்துமெ னூழே (5)

ஊழ்செயுங் கொடுமை யாதெனப் பகர்வே
னுற்றமுற் சென்மங்க டோறும்
பாழ்மன வழியே சென்றுசென் றெவ்வாப்
பவம்பல பயின்றனன் போலும்
தாழ்வதால் வறுமை பிணிதுயர் கவலை
தலைச்சுமை சுமையெனத் தந்து
வாழ்வெலாங் கடத்து மையனே யவ்வூழ்
வலிமைதா னிருந்தவா றென்னே (6)

என்னெனச் சொல்வே னிந்தமா நிலத்தில்
யான்சென்ம மெடுத்தநாண் முதலாய்
மன்னுவ வனைத்துந் துன்பமே யல்லான்
மற்றொரு சுகத்தையுங் காணேன்
கன்னல்வில் லுடைய காமனை யெரித்த
கண்ணுதற் கடவுளே யெந்தாய்
அன்னைதான் பெற்ற சிறுவனைக் கைவிட்
டாலவ னுய்யுமா றேதே (7)

ஏதொரு தவமு மிழைத்தில னதனு
லிதம்பெறற் குரிமையே யில்லை
வாதினிப் பேசி வழக்கெதிர்ந் தாட
வலியிலைத் துணையுமே யில்லைப்
பேதுறச் சூழ்ந்து பிடித்தெனை வருத்தும்
பிணிக்கெலாம் மருந்துமே யில்லை
ஆதலி னுனையே தஞ்சமென் றிரங்கே
னஞ்சலென் றையனீ யருளே (8)

ஐபநீ யருளா யென்னிலென் குறையை
யார்க்கெடுத் தியம்புவ லறியேன்
உய்யுமா றெவன்கொ லப்பனே சிறியா
ருஞற்றிடும் பிழைகளைப் பெரியோர்
வையமேற் பொறுக்கும் வழக்கறிந் திலையோ
வன்மநீ சாதித்தன் மரபோ
செய்வதொன் றறியேன் சிவசிவா வந்தென்
றுயரெலாந் தீர்த்திடா யொருங்கே (9)

ஒருங்குசேர்த் தைந்து நெடும்புல வேட
ரொடுமெனை யுடற்குடி யிருத்திப்
பெருங்கலா மிழைப்பப் பேதகஞ் செய்தாய்
பித்தநின் பிழைப்பொரு பிழைப்போ
மருங்கெலாஞ் சூழ்ந்து வந்துவந் துருக்கி
வாட்டிடு மனக்கவ லறுத்திவ்
விருங்கடற் புவிமே லெனைப்புரந் திடுதல்
யார்கட னென்றெனக் கோதே (10)

ஓதுவாய் நினது படைப்பவற் றுள்ளே
யானுமிங் கொன்றென விருந்தால்
வேதனைக் காளாய் விடுப்பதும் முறையோ
விழியொரு மூன்றுனக் கிருந்தும்
பாதகர்ப் போன்று பராமுகஞ் செய்யிற்
பாவியேன் பழியுமுன் பாலாம்
ஆதலிற் சிவனே வந்தருள் செய்வா
யகலவென் மனத்தினவ் வியமே (11)

ஔவிய மனத்தோ டலமரா தொருங்குற்
றமர்ந்தியான் வாழ்தலோ வரிது
செவ்விதா யதனைத் திருத்தியுன் பாத
சேவையிற் சென்றிடச் செய்தே
எவ்வகைத் துயரு மிடும்பையும் பிணியு
மெனைத்தொட ராவகை புரிந்தும்
இவ்வுடற் பிரிநா ளையநின் னடிக்கீ
ழிருத்தியாண் டருளுக வெனையே. (12)

வாழி

அருளுயர் பைந்தேன் றமிழ்மொழி யெழுத்தி
னுவிபன் னிரண்டையு முதலாய்
விரவுற வமைத்தந் தாதியா யிங்ஙன்
விளம்பிய பன்னிரு கவியின்
பொருளினை நுகர்ந்து பிழைபொறுத் தன்பாய்ச்
சிவபதம் போற்றுநர்க் கென்றும்
மருவுக சுகமே மாதவம் பொலிக
வையகம் வாழ்கவா ழியவே.

சிவமாலை முற்றிற்று.

---

ஐந்தாவது

பெரியதுறைத்

# திருமுருகர் பதிகம்

காப்பு

பெருகு மேன்மைப் பெரிய துறையுறை
முருக வேளை முறையினிற் பாடிடப்
பொருவில் யானைப் புகர்முகத் தைங்கரன்
திருவி னல்லடி சிந்தையிற் சேர்த்துவாம்

நூல்

சீரேறு கமலமமர் மீதேறு பகவனரி
தேடரிய விமல னயனஞ்
சிந்துபொறி மூவிரண் டொன்றுபட வந்துநற்
சிறுவனாய்ச் சரவணத்தில்
பேரேறு மின்னமுத நேரேறு தன்னியம்
பெட்பினொடு கார்த்திகைப்பேர்ப்
பெண்ணுதவ வுட்கொண்டு பண்ணவர்கள் போற்ற [நணி
பிரியாத வருளின்மருவி
போரேறு பொற்றடந் தேரேறு சூரனுயிர்
போக்கிவிற லாக்கியிதமாய்ப்
புத்தேளி ரைத்தானம் வைத்தஜய சிங்கமே
பூரண நந்தவடிவே
வாரேறு கொம்மைமுலை யேரேறு மம்மைதற
மங்கைக் குவந்தகணவா
மதுவேறு பூம்புறவ மஞ்சேறு பெரியதுறை
மருவுசிவ திருமுருகனே (1)

விண்ணினுறை பண்ணவரி னெண்ணரிய கின்னரர்கள்
வேதசிவ நாதகணமும்
வித்தியா தரரியக்கர் சித்தரொடு மற்றுமுள
வீரபுய ஞதிவிறலோர்
எண்ணிறவ நாதர்நம சண்முகப ராதியென
விணையடிக டொழுதுபரவ
இறைவிசுர கயவல்லி குறவரரு ளியவள்ளி
யிருமருங் கினிதுவிரவ
வண்ணமிகு மோராறு சென்னிமுடி சூடியே
வனசகர மரபினொளிர
வட்டமிட் டாடுமயி லட்டதிக் கேறிவரு
வாலவடி வானபதியே
மண்ணுலக பாசவிரு டன்னினலை யாமலே
மாட்சிமிகு காட்சிதருவாய்
மதுவேறு பூம்புறவ மஞ்சேறு பெரியதுறை
மருவுசிவ திருமுருகனே (2)

புதியநறை யமிழ்தொழுகு மினியமொழி புகல்குறவர்
பூவையவ ளன்றுவெருவப்
பொறப்பினுயர் வள்ளிமலை யுற்றுவரு தந்திமுக
புங்கவற் கிளையகுழகா
அதிகபல னரவினுயர் கொடியனடி யரிகடமை
யமரினிடை வீட்டவெண்ணி
அறமதலை முதலரச ருறவுதவி புரியரித
னன்புக் கிசைந்தமருகா
கதிமருவு விசைகொண்டு முதுகனக மேருகிரி
கடகடென் றதிரவன்பர்
கடிதினுள நெக்குருக நடனமிட் டாடிவரு
காலமயி லேறுகுருவே

மதியினெளிர் திருவதன வரைமகண்மு னருளவரு
மைந்தனே கந்தவெந்தாய்
மதுவேறு பூம்புறவ மஞ்சேறு பெரியதுறை
மருவுசிவ திருமுருகனே (3)

கங்கைமதி யணியரனை யின்றியொரு தக்கனுர்
கடிதுபுரி வேள்விதன்னைக்
கறுவுட னழிக்கவென விறைவனவ னுட்கொண்ட
கரிசறு குறிப்பறிந்தே
துங்கமிகு மயிலேறி யங்கைசிலை வேல்கொண்டு
துய்யவிறல் வாகுமுதலோர்
தொடரவிரை வுடனேகி யடல்புரிந் தவன்மகிழ்வு
தோன்றவுறை செய்கைநீத்தே
பொங்குசின வுக்கிரனை யங்குதவ வைத்தவொரு
புனிதசிவ குமரபரனே
பொன்னுட ரெங்காளு மன்னேவல் செய்யவுயர்
பொற்றவி சிருக்குமிறையே
மங்கைகுற வஞ்சிகய நங்கையொடு புல்லவரு
மன்றலணி கின்றபுயனே
மதுவேறு பூம்புறவ மஞ்சேறு பெரியதுறை
மருவுசிவ திருமுருகனே (4)

எந்தநிதி முந்துமணி வந்துதவி னுந்திருவி
னிந்தவுல கெய்துமெனினும்
ஈசசுத னேசிறிதுன் மாசிலரு ளின்றெனினி
லென்னபய னன்னவற்ருல்
முந்தவொரு சூரனவ னந்தமறு மண்டங்கண்
முதல்வனு யாண்டுமுடிவின்
மூர்க்ககுண மிஞ்சிநின் வேற்கிரைய தாயினுன்
முத்தியருள் சுத்தசோதீ

பந்தவிரு ணீக்கிநனி யுய்ந்துகடை யேழையேன்
பற்றுசிவ ஞானமுற்றே
பரமகுரு பரவுனது சீரடிய னுகவருள்
பாலிக்க வேண்டுமையா
வந்தவிரை வெட்சிமல ரிந்துள முடித்தருக
மாலுக் குவந்தமருகா
மதுவேறு பூம்புறவ மஞ்சேறு பெரியதுறை
மருவுசிவ திருமுருகனே (5)

ஆசைபெண் மீதுபொ னாசைமண் ணுசைமற்
றழகுவலி தைரியத்தில்
ஆசைகள வாதிபல நீசர்தொழி லாசைமலி
யடியேனை யிவைகள்செய்யும்
பாசவினை நீக்கியுன் ஞசைமேற் கொண்டிடப்
பண்ணுவாய் பண்டைநாளிற்
பத்தியுடனே தொழுத நக்கீர தேவனிடர்
பாறவருள் பரமபதியே
மோசமிகு நாயடிய னேதுபிழை செய்தாலு
முந்துமரு டந்துதவுவாய்
மொய்தினைப் புனமதனி லெய்துகண்ணி யெனவள்ளி
முன்னுரு வெடுத்தமுதல்வா
மாசறுந லுபதேச மீசனர னுக்கன்று
மகிழ்வொடு புரிந்தமணியே
மதுவேறு பூம்புறவ மஞ்சேறு பெரியதுறை
மருவுசிவ திருமுருகனே (6)

ஆலையிடு கன்னலென வென்னைநோ யனவரத
மச்சப் படுத்திவரவும்
அளவற்ற பலகோடி யுள்முற்ற கவலைபல
வங்கிங் கலைத்துவிடவும்

காலினதி தூரமிக வோடியே செல்லினுங்
 கருதுபய னடைதலிலதாய்க்
காசபண மின்றியே கடனுதவி னோர்முனிவு
 காணலா லச்சமுறவும்
கோலநிரு பாலரிறை கொண்டுவரு கென்னவுங்
 கொண்டமனை யண்டுமிளையோர்
கூடுபசி தீரென்ப ரேதுகொ லியற்றுவேன்
 குறுவிழி விழிப்பதல்லால்
வாலறிவ வேலிறைவ மேலான நின்கருணை
 வள்ளலே யுதவவேண்டும்
மதுவேறு பூம்புறவ மஞ்சேறு பெரியதுறை
 மருவுசிவ திருமுருகனே (7)

கல்வியது கற்பதூஉங் கவலைமேற் கற்றதைக்
 காப்பதூஉங் கவலையன்றிக்
கல்வியில் லாவிடினு மல்லலுறு கவலைமனை
 காணிபொரு ட்டல்கவலை
வல்வினைகள் சேரினுங் கவலையவை நீங்கினும்
 வருமெனு வஞ்சுகவலை
வறுமையது செறியினுங் கவலையது போயினும்
 வந்தபொருள் போற்றுகவலை
தொல்லைபடு கவலையெனும் வெள்ளமதி லாழ்ந்தனன்
 றூக்கிவிடு துணையுமிலையே
சுத்தநின தருளின்றி யித்தமிய னேன்கவலை
 தொலையுநெறி யில்லையையா
மல்லடு புயந்தழுவி நல்லகய வல்லிகுற
 வல்லிதொழ நின்றபதியே
மதுவேறு பூம்புறவ மஞ்சேறு பெரியதுறை
 மருவுசிவ திருமுருகனே (8)

பலவகைய கவலையெனு மசனிநனி குமுறிடப்
பாவமழை தோய்ந்துதளராப்
பாசவிரு ணீடுபுவி யானவிக் காட்டினிற்
பரவுபிணி மிருகநடுவே
விலகிவழி படர்பரிசை யறியாத வேலையினில்
வேட்கையென் பூட்கையொன்று
விரைவினெடு தொடருதலு மரியமா யைக்குழியில்
வீழவங் கிறுதிநாகம்
அலகிலதி சினமருவி நனிசீற நியதியெனு
மறுகுவேர் பற்றவதனை
அறுத்திடக் காலவெலி யாங்கூறு மின்பமது
வள்ளிக் குடிக்குமுறைபோல்
மலவிருளி னலைகின்ற தமியேனை யாட்கொண்டு
மாண் கருணை யீண்டுதவுவாய்
மதுவேறு பூம்புறவ மஞ்சேறு பெரியதுறை
மருவுசிவ திருமுருகனே (9)

செங்குருதி தோனரம் பென்புதசை யோடிலகு
சீரிலா விந்தவுடலைச்
சிற்றுணவு தத்தமக் கென்றுநரி நாய்கூளி
சிந்தைசெய் தேயிருப்பத்
தங்கமொடு முத்துமணி சங்கினுறு நற்பணிக
டகுதியென வேதரித்துத்
தாழ்வொருவர் சொல்லாது வாழ்வமெனு மூடருட
ருன்பிரியி னேதுபுரிவார்

அங்கையினில் வேல்கொண்ட வையனே யேழையெனை
யாண்டடிமை கொண்டுமகிழ்வால்
ஆதரித் தேயுலகி லேதுபயன் வேண்டுறுவ
னவையெலாந் தந்துமுடிவில்
மங்கல மிகுந்தபத மங்கருளு வாய்வள்ளி
மங்கைகய வல்லிகணவா
மதுவேறு பூம்புறவ மஞ்சேறு பெரியதுறை
மருவுசிவ திருமுகனே. (10)

திரு முருகர் பதிகம் முற்றிற்று.

---

ஆறுவது

## மட்டக்களப்புப் புளியநகர் ஆனைப்பந்திச்

# சித்திவிக்கினேசுரர் பதிகம்

காப்பு

தேன்முரலும் பைங்கா வளங்கூறுஞ் சேனுலகைப்
போன்மலியுஞ் சீரார் புளியநகர்ப்—பான்மிளிரும்
பொற்கோயி லைங்கரனைப் போற்றுவா மெப்போதுஞ்
சொற்போது கொண்டே தொழுது.

நூல்

சீர்மேவு செகதல மெலாமினிது வாழ்கவே
தேவர்குறை யாவுமகலச்
செங்கதிரோ ராயிர மொருங்குறீஇ யிலங்குமுறை
தேசிலுயர் மாசிலுருவுங்
கார்மேவு கருணைமழை மதயானை வதனமுங்
கனகநீண் மணிமருப்புங்
கங்கையருள் பொங்குநய னங்களொரு மூன்றுமைங்
கரதலக் கடிகொண்மலருந்
தார்மேவு நூறிகழு மார்பகமு முந்தவுயர்
சந்தமிகு தொந்திவயிறுந்
தாழுமடி யார்கணல வாழ்வுபெற வரமுதவு
தாமரைப் பதமுமிலக
வார்மேவு கொம்மைமுலை யம்மையுமை தந்தசிவ
மைந்தனே யெந்தைமுதலே
மலர்வாவி சூழ்புளிய நகரியா னைப்பந்தி
வளர்சித்தி விக்னேசனே (1)

பன்னிருகை வேலற்கு முன்வந்த செல்வனே
பாற்கட லுறங்குதிருமால்
பரிவுகொளு மருகனே வல்லபை மணாளனே
பரசிவ கணத்தினரசே
முன்னமரர் குறையகல வமரேறு கயமுகா
சூரனை முடித்தமுதலே
மொய்கழல் வணங்கியெவர் யாதுமுயல் போதினும்
முந்திவந் துதவுபதியே
நின்னருளை யார்பெறினு மன்னவர் தமக்குநிகர்
நீணிலத் தெவருமுளரோ
நித்தியா னந்தபரி பூரண காரண
நிமலனரு ளிணையில்விமலா
மன்னுநவ மணிமவுலி சென்னிமிசை மின்னநின்
மாட்சிமிகு காட்சிதருவாய்
மலர்வாவி சூழ்புளிய நகரியானைப்பந்தி
வளர்சித்தி விக்னேசனே (2)

இலகுமட் புவனமொரு தடநெடுந் தேரதா
யிரவிமதி யாழியாக
வினியசதுர் வேதங்க ளசுவங்க ளாகவே
யியல்புகதி குணமுணர்ந்து
குலவவிடு பாகனய னுகவெழின் மகமேரு
குனிசிலையு மாகமுறையே
கொடியினிகழ் வாசுகிநல் வடமாக நெடியமால்
கூர்முகப் பகழியாக
உலவுபுர மூன்றுபொடி செய்யவெழு மையனுனை
நினையாம லுன்னுமுறையால்

ஒப்பரிய தேர்குலைய வச்சிறுத் திட்டபுக
மொப்பிலா ஞானவடிவே
மலைமக ளளித்தமத வாரணு நின்பெருமை
வாயுற வகுக்கவெளிதோ
மலர்வாவி சூழ்புளிய நகரியா னைப்பந்தி
வளர்சித்தி விக்னேசனே (3)

வலிமிகு விருத்திரா சுரனைமு னுருத்திரன்
மண்டமரில் வென்ற வலியும்
மருவுவசை பெயரவுய ரிசைபெருகு மகலிகைதன்
மகிழ்நனை யடைந்தமரபுங்
கலியது பிரிக்கவக னளனையெழி றமயந்தி
கண்டுமு னடைந்தவகையுங்
கருதரிய நிருதர்படை சாடியே சீதைசிறை
காகுத்தன் மீண்டவிறலும்
நிலவலைய மீதுமுன் பகிரதன் வரநதியை
நேருற வழைத்தநெறியும்
நீடுதிசை யெண்மருயர் போகமொடு தெள்ளமிழ்து
நிலையுறப் பெற்றநிரையும்
மலர்கொடுனை யர்ச்சித்த பேறெனிற் ருழவினி
மற்றுமொரு தெய்வமுளதோ
மலர்வாவி சூழ்புளிய நகரியா னைப்பந்தி
வளர்சித்தி விக்னேசனே (4)

பொய்க்கரி யுரைத்தவழி மாமற்கு வந்தபழி
போக்குநின் புதுமைகேட்டுப்
பூதலத் துனையுதவு தந்தைதா யிருவரும்
புந்தியி னினைந்தநினைவு

மெய்க்கவுனே முறைமுறையில் வேண்டிமகிழ் வெய்தி
மேலினித் தெய்வமெதுகொல் [ணூர்
வேதமுத லாகம புராணமிவை விள்ளரிய
மேதகுநல் சீர்த்தியுடையோய்
விக்கின மிகும்புவன பாசவிருள் சிக்கியே
விதியொடுனே யேத்தவறியா
வெய்யதுய ரேழையே னுய்யவரு ளையனே
வேறுதுணை யாருமிலர்காண்
மைக்கரும் பூங்குழலி குறவர்மகள் வெருவவெதிர்
வந்துலவு தந்திமுகனே
மலர்வாவி சூழ்புளிய நகரியா னைப்பந்தி
வளர்சித்தி விக்னேசனே (5)

தருமநடை கொள்ளாத பாவிகட் குறுதன்மிகு
தாழ்வுபல வாழ்வுதுலையாஞ்
சத்யமிது தேர்ந்துமென் சாமிநின தருளிலாத்
தாழ்வினுன் மாயைவழியே
இரவுபக லேகலே பெரியதொழி லாயினே
னெவ்வகையு முய்யவறியேன்
இடர்பலவு மெய்துகா லன்றிமறு காலுன்னை
யெள்ளளவு மெண்ணவியலா
விரையுமன மொருவழிப் பட்டுநின் பாதமலர்
மேவலெக் காலமறியேன்
மேனெறி பிழைத்தவொரு விக்ரமா தித்தன்மனை
மெல்லிக் கிரங்கவிலையோ
வரைமகண்மு னருளவரு பெருமைசெறி புதல்வனே
வாமசிவ நாதகணனே
மலர்வாவி சூழ்புளிய நகரியா னைப்பந்தி
வளர்சித்தி விக்னேசனே (6)

நறுமலர்க ளேவியுனை யர்ச்சிக்க வறிகிலேன்
னவிலமந் திரமுமறியேன்
நல்லவொளி கண்டிலேன் பல்லவிருண் மாயையே
நான்மருங் கணையநலிவேன்
வறுமைதுய ரனபலவு மிரவுபகல் வாட்டலான்
வளர்தரும முயலவறியேன்
மக்கண்மனை காணிபொருள் மேலுலவு மாசைநனி
மலியநினை மனதினினையேன்
சிறுவரிழை தவறெலாம் பெற்றவர்கண் மன்னித்தல்
செகதலத் தியல்புமுறையால்
சிற்றறிவி னுலடிய னேதுபிழை செய்யினுஞ்
சிந்தையிற் கொண்டுசினவேல்
மறுவகலு மானைமுக வள்ளலே கெஞ்சினேன்
மல்கருணை நல்கியருள்வாய்
மலர்வாவி சூழ்புளிய நகரியா னைப்பந்தி
வளர்சித்தி விக்னேசனே (7)

கற்றவரை யிகழ்தலுயிர் வதைசெய்து தசையுண்ணல்
கட்குடித் தயர்தன்மகளிர்
கற்பழித் திடுதலிழி வசைபேசல் பொய்கூறல்
கலியினு னைந்துமெலிவால்
உற்றவர்க் கில்லையென லொவ்வாத செயன்முயல
லுறவரைப் புறமகற்றல்
உரியசம யத்தைவிட லெரியைமனை வைத்துவிட
லூறுறவி தூர்த்துவிடுதல்
நற்றரு தறித்திடுத லாநிரை வருத்திடுத
னவிலருங் களவுபயிலல்

நாளுமிவை தொழிலெனு வாழுமவர் தம்முறவு
நாடவெனை விட்டுவிடுகேல்
மற்றுனது பாதமே கதியென்ன நம்பினேன்
மனதுதுயர் யாவுமொழிவேன்
மலர்வாவி சூழ்புளிய நகரியா னைப்பந்தி
வளர்சித்தி விக்னேசனே (8)

தந்தைதாய் குருவைவழி படுதலவ ரிசைமொழிக
டள்ளாது கொள்ளன்மரபைத்
தாழ்கவொட் டாதுநனி பேணல்வதி மனைதனைத்
தகைபெறச் செய்தன்முறையே
வந்தவரை யாதரித் தியல்புகர வாதிடுதன்
மறுவில்கலை பலவுமுணர்தல்
வையக வுயிர்க்கினிமை செய்தல்பழி பவமொழிதல்
வாய்மைதவ மாதிதழுவல்
சிந்தையொ டுனைப்பரவ லிந்தவகை யந்தமுயர்
சீலமிழை கோலமுடையார்
செய்கைநடை கண்டுபின் பற்றவெனை யுய்த்திடுதி
சித்திதரு மத்திமுகனே
வந்துதொழு வார்க்கரு ளுவந்துதவு விந்தைமிகு
மாசிறவ ஞானமணியே
மலர்வாவி சூழ்புளிய நகரியா னைப்பந்தி
வளர்சித்தி விக்னேசனே (9)

வாயார நினதுதிரு நாமங்க ளோதவும்
மதுமலர்ச் சுமைகள்வாரி
வளர்கோயில் சூழவந் தடிமீது தூவியுண்
மதில்வினெடு பணிதல் செயவும்

தேயாத நினதுகழல் வாமசிங் காரவள
 தெரிசனையில் விழிகள்செலவுஞ்
சேரடியர் கூறினிய தெள்ளமிழ்தி னெழுமிசைகள்
 செவிவழிச் சென்றுபுகவும்
ஆயாச மணுகாத வின்னபணி பரிசெலாந்
 தமியனுக் கமையவருளின்
ஐயமறு குறையிங்கு நாடாது செந்திருவு
 மண்டிச் சிறந்துபொலிவள்
வாயாத நிலையெலாங் கைகூடு மாதலின்
 வரமிதற் குறுதிதருவாய்
மலர்வாவி சூழ்புளிய நகரியா னைப்பந்தி
 வளர்சித்தி விக்னேசனே. (10)

சித்திவிக்கினேசுரர் பதிகம் முற்றிற்று.

---

ஏழாவது

கண்டி நகர்ச்

# செல்வவிநாயகர் பதிகம்

---

## காப்பு

(நேரிசை வெண்பா.)

பொற்புலவு முச்சிப் பொருப்பணிசூழ் கண்டிவளர்
விற்பனமெய்ச் செல்வ விநாயகன்றன்—அற்புதமார்
செஞ்சரணை யேத்தித் தினமுமய ராதுருகி
நெஞ்சகமே வாழ்த்தாய் நினைந்து.

கார்விளங்கு மாவளங்கூர் கண்டிநக ராலயத்துச்
சீர்விளங்கு செல்வ விநாயகனைப்—பேர்விளங்கச்
சொல்வார்க்கும் போற்றித் தொழுவார்க்குஞ் சூழ்துயர்போய்ச்
செல்வாக்கு முண்டாஞ் சிறந்து.

(நிலைமண்டில ஆசிரியப்பா.)

திருவள ரருமறைப் பிரணவ சொருப
வொருமருப் பிருசெவி மூவிழி நால்வா
யைங்கரத் தாறு மதவணி யெழுசிரத்
தெங்கோன் பாத பங்கய மாமலர்
சிந்தையின் மலர வந்தித் திறைஞ்சிப்
பைந்தமிழ் விருத்தப் பதிகமோ துவனே.

## நூல்

(ஆசிரிய விருத்தம்.)

தேர்கொண்டு விண்ணுலவு செங்கதிரொ ராயிரஞ்
சேர்ந்தொருங் குற்றவகைபோற்
செய்யபல மாமணி குயிற்றிமிளிர் பொன்மவுலி
சென்னிமிசை சேர்ந்துதிகழத்

தார்கொண்டு முப்புரியி னூல்கொண்டு தென்மலைச்
சாந்துசல வைச்சவாது
தாமுண்டு வளருரத் தாரமொடு சிந்துரஞ
சமர்தொடுத் திகலநுதல்மேற்
பேர்கொண்டு தொழுமடியர் சிந்தைக் கிசைந்தபிற
பெட்பெலாம் பெரிதுமமையப்
பேசரிய காட்சிதந் தாளவரு தேசிகா
பிரமற்கு வாய்த்தமருகா
சீர்கொண்டு விம்மிவளர்கொம்மைமுலை யம்மையுமை
செய்தவத் துற்றபுதல்வா
திருவினுயர் கண்டிமா நகரினிது குடிகொண்ட
செல்வவினா யகக்கடவுளே (1)

நித்தியா னந்தபர சோதியா யன்பருயர்
நெஞ்சகத் துலவுநினைவாய்
நீடரிய வுலகமொடு தேடரிய விடமெலா
நீக்கமற் றிலகுநிதியாய்
அத்துவித நிலைகொண்ட சித்தசித் தாகியே
யாதிநடு வந்தமிலதாய்
ஆரிய நலத்தசது ராரண முகத்ததா
யாதப மிகுத்தவொளியாய்த்
தத்துவா தீதபரி சுத்தமிகு சத்தியத்
தாரகத் தருமபொருளாய்த்
தனுகரண புவனபோ கங்களிவை தந்துதவு
சாமியாய்ப் பூமிபுகழுஞ்
சித்தியொடு புத்தியிரு தேவிமார் சூழவரு
தேவகண நாதபதியே
திருவினுயர் கண்டிமா நகரினிது குடிகொண்ட
செல்வவினா யகக்கடவுளே (2)

இப்பெரிய பூவுலகி லிப்பிறவி நீங்குநா
ளெப்பிறவி யெய்தவருமோ
இங்குபெறு செல்வங்கள் பொங்கிவரு போகங்க
ளினியவென மனதுமயலாய்
ஒப்பரிய தவறுபல நாளுக்கு நாள்விளைத்
துயர்தரும நடையினழுவி
ஓயாத பொருணசையி னுயாச மின்றியே
யோடித் திரிந்தலைந்து
மைப்பயிலு நஞ்சுவிழி மாதரனு ராகமிகு
மாயவலை பட்டுமறுகி
மாசுபடர் பாசநெடு மாழிவாய் மூழ்கியே
மாநிலத் தயருமளியேன்
செப்பரிய நினதுபத சேவையிற் சிந்தையொடு
செல்லவெக் காலமருள்வாய்
திருவினுயர் கண்டிமா நகரினிது குடிகொண்ட
செல்வவிநா யகக்கடவுளே (3)

அன்னைகரு தனிலுற்ற வன்றுதொட் டின்றளவு
மளியற் கமைந்தசுகமென்
அரியபசி தாகமோ கந்துயர துன்பங்க
ளன்றிமற் றென்றுமிலையால்
இன்னுமொரு பிறவிகொண் டிங்குழல வையாம
லேழைக் கிரங்கியருள்வாய்
ஏரம்ப மூர்த்தியே பேரின்ப வாழ்வுநின்
னீடற்ற பாதநிழலே
பின்னுமொரு பதமினிப் பெரிதென்று வேண்டிலேன்
பிறவிதொறு மாற்றுபிழைகள்

பேதைமையி னுலென்று தாதைநீ மன்னித்தல்
பெரிதுமுன் கடமையன்றோ
தென்னுலவு தென்னிலங் காபுரியி னுப்பணுயர்
செங்கடக நகரியென்னுந்
திருவினுயர் கண்டிமா நகரினிது குடிகொண்ட
செல்வவிநா யகக்கடவுளே (4)

கல்விபல கற்றென்ன கனசெல்வ முற்றென்ன
கன்னியரை வேட்டுமென்ன
காசினி துதிப்பவுய ராசவுத் தியோகங்கள்
கவினுற நடாத்தியென்ன
பல்வகைய வாழ்வெலா மெல்லேசிறி தாகியே
பரிதியெதிர் பனியிலழியும்
பரிசுபல காட்சியிற் கண்டுகண் டின்னமும்
பற்றுகளை முற்றவொழியேன்
தொல்லேதரு மாசையா றுயர்வளரு மென்றறிஞர்
சொல்லுமச் சொல்லேயுணரேன்
துரிதமொடு மறலிவிடு தூதர்க்கு முந்தவரு
துன்பங்க ணீக்கவறியேன்
செல்லுலகி லின்பமுற வேற்றதவ மாற்றிலேன்
றெய்வமே தஞ்சமினியார்
திருவினுயர் கண்டிமா நகரினிது குடிகொண்ட
செல்வவிநா யகக்கடவுளே (5)

மலர்தலேய வுலகுபல் முறைமுறையி னுருவெய்தி
வந்துநிலே கொண்டுமறைதன்
மரபினியல் பாமன்று மாயையின் விகாரமே
மாயைக்கு மாதியொருவன்

நிலைமைபெறு தலைவனு மத்தலைவ னீயன்றி
நேர்வருந் தெய்வமிலையே
நிற்பவொரு நிலையிரவி யற்புத நிகழச்சிபல
நிலவுலகி னிகழுமுறைபோற்
சலனமற நின்றுநீ பலநிகழு மாடலுஞ்
சரிகண்டு பிரிவுகொண்டு
தக்கபரி சுதவுவாய் நற்கரும முயலாது
தமியனுக் கேதுதருவாய்
திலகமென நெற்றிமிசை வந்தமரின் முந்துமொரு
சிந்துரனை யிட்ட திறலோய்
திருவினுயர் கண்டிமா நகரினது குடிகொண்ட
செல்வவிநா யகக்கடவுளே (6)

ஐயநின் பாதபுக ழுணுவளவு மோர்கிலா
ரருமறைகள் கற்றுமுணரார்
அனவரத மொருசிறிது தவமென்ப தாற்றிடா
ரறவழிச் சார்ந்துமறியார்
வையமிசை வந்தவர லாறுநினை யார்முடிவில்
வாய்ப்பதொரு கதியுமுணரார்
வாழ்வுசத மென்றுபொருள் காலியொடு கன்றுமனை
மாட மிவை தேடியலைவார்
பொய்யுடலை நீங்கியுயிர் போம்பொழு திரங்குவார்
புல்லறிவி னுளரவர்போற்
புத்திகெட் டலையவெனை வைத்திடா தொருசிறிது
போதம் புகட்டியருணீ
செய்யிலிவ னுய்குவே னெயவிவ் வரமொன்று
சிறியற் கிரங்கியருள்வாய்
திருவினுயர் கண்டிமா நகரினிது குடிகொண்ட
செல்வவிநா யகக்கடவுளே (7)

வஞ்சமொடு சூதுபுரி வாரொரு மருங்குயிர்
வதைத்துணவு கொள்வ ரொருபால்
மார்க்கவகை கோடியிற் றீர்க்கமவர் மதமென்று
வாதிடுவர் மற்றுமொருபால்
தஞ்சமென வந்தவர்கள் சந்தியி லலைந்திடத்
தள்ளிவிடு கள்வரொருபால்
சாதுரிய வார்த்தையாற் பேதையரை யேய்த்தவர்
தனங்கவர் மனுக்களொருபால்
நெஞ்சமொடு பொதுவேறி வஞ்சக வழக்கிரு
ணிதிதொலைத் திடுவரொருபால்
நெறிபிறழ மதுவுண்டு முறைபிறழ்வ ரோபுவியி
னிறையவெப் பாலுமுண்டு
செஞ்சொலுயர் தருமமினி நின்றுலவ வையகோ
தினையளவி னிடமுமிலையே
திருவினுயர் கண்டிமா நகரினிது குடிகொண்ட
செல்வவினா யகக்கடவுளே (8)

ஆதிசிவ னன்றுபுர மூன்றையு மழித்தவகை
யயன்றெழி னடாத்துமகிமை
அரியுமது கயிடவரை யமரதனில் வென்றவிற
லமரர்குறை தீர்ந்தவருமை
மாதுமை யிருந்தரிய மாதவ முயன்றினிய
மாவரம் பெற்றமரபும்
மதகரி முகத்தனே நின்பெருமை யாலெனின்
மற்றுமுயர் தெய்வமுளதோ
வேதனை மிகுத்தபிணி வெந்துயர் தருங்கவலை
வினைவழிப் பெற்றகுறைகள்

விரவியெனை வாட்டலா லுருகிநினை வேண்டினேன்
வேறுபுக லிடமுமிலையே
தீதணைய வையாம லாதரித் தேழைதுயர்
தீர்த்தினிமை செய்தல்கடனே
திருவினுயர் கண்டிமா நகரினது குடிகொண்ட
செல்வவிநா யகக்கடவுளே (9)

முந்துபவ மெத்தனைகொ லப்பவந் தோறுவினை
முற்றளவி னெல்லையெதுகொல்
முத்திநிலை யேதெனது பத்திநிலை தானுமெது
முருகற்கு மூந்த துணைவ
வந்தெனது புந்தியி னினைந்தவர மின்றுதவி
வயதுமுடி வாகுமளவில்
வறுமைபிணி தாழ்வினுன் மலசலப் பாயன்மிசை
மறுகக் கிடத்திடாமல்
பந்துமய லுங்குழுமி வந்துபழி யாமுனம்
பதவிதந் தருளவருவாய்
பராமுகங் கொண்டுநீ பரிசிது மறுத்திடிற்
பழியுநின் பாலதேயாம்
செந்திரு பயந்துதவு கன்னிமார் பன்னிருவர்
திருமணஞ் செய்ததிறலோய்
திருவினுயர் கண்டிமா நகரினிது குடிகொண்ட
செல்வவிநா யகக்கடவுளே (10)

(வேறு)

மனநிலை கடந்தாய் போற்றி மதகரி முகத்தாய் போற்றி
முனிவர்த மரசே போற்றி முத்தியின் முதல்வாபோற்றி
வனமுயர் வளங்கூர் கண்டி மாநகர்க் கோயில் கொண்டு
வினை தவிர்த் தாளுஞ் செல்வ விநாயகா போற்றி போற்றி.

வையக மினிது வாழ்க மாநல மனைத்து மோங்கிச்
செய்தவஞ் சிறப்ப யாண்டுஞ் சிவமதஞ் செழித்து நீட
ஐமுகக் கடவுள் பாதத் தன்புளத் தமைக நாளும்
எய்துக சுகமே நீடி யாவரு மினிதே வாழ்க.

(வெண்பா)

வாழ்வுயருஞ் சிந்தை வளர்கருமங் கைகூடுந்
தாழ்வகலு மின்பந் தழைத்தோங்கும்—சூழ்கவல்போம்
நாடரிய செல்வ விநாயகனார் நற்பதிகம்
பாடுவதா லென்றும் பணிந்து.

செல்வவிநாயகர் பதிகம் முற்றிற்று.

---

எட்டாவது

கண்டி நகர்க்

# கதிரேசர் பதிகம்

---

## காப்பு.

(நேரிசைவெண்பா)

மாமருவு கண்டி மருவு கதிரேசன்
றாமரைத்தாட் கோர்பதிகஞ் சாற்றவே - பூமலர்தூய்
வந்திப்பா முந்தி வரமுதவு வாரணத்தைச்
சிந்தித்தே நெஞ்சிற் றெளிந்து.

தொல்வினைக ணீங்கித் துயரமொடு துன்பம்போய்
நல்வகைய வின்பங்க ணுடுமே—அல்லுபகல்
ஐந்துகர னுரிள்வ லாறுமுகப் பன்னிருகைக்
கந்தனையாங் கைதொழுதக் கால்.

சூர்தடிய வேல்தொட்ட சுப்ரமணி யப்பெருமான்
சீர்பெருகு மின்பத் திருவடியை - யார்மனதில்
வைத்துப் பரவுவரோ மற்றவர்க்கே வாழ்வெல்லாஞ்
சித்திக்கு மன்றே சிறந்து.

## நூல்

(ஆசிரிய விருத்தம்)

சீர்பெற்ற தேனிதழி கங்கையோடு திங்கள்வளர்
செஞ்சடில வாதிசிவனுர்
செய்யவிழி பெய்தவொளி சரவணப் பொய்கையிற்
சேர்ந்துருக் கொண்டுசிசுவாய்

பேர்பெற்ற கார்த்திகைப் பெண்கடரு பாலுண்டு
பின்னருமை பால்வளர்ந்து
பிரமாதி தேவர்தொழ வரமாதி தந்தமரர்
பெரியசிறை யொருவிமகிழச்
சூர்பெற்ற வரமோடு வாழ்வற்று மாழ்தரச்
சூழ்ந்துசமர் வென்றுமுறையே
துதிமருவு கற்பினுயர் துய்யசுர குஞ்சரச்
சுந்தரியை வேட்டதுரையே
பார்பெற்ற வளனெலாஞ் சீர்பெற்று நாடியோர்
பாலுற்ற பான்மையணிசேர்
பகரரிய கண்டிமா நகரமெனு மொப்பரிய
பதிமேவு கதிரேசனே (1)

உலகெலா மொளிபெறக் கிரணங்கள் வீசுமுக
மொன்றடிய ரோதுதுதிகேட்
டுவகையொடு வரமுதவு முகமொன்று வேள்விகளை
யோம்புநன் முகமுமொன்று
மலைவகல மாமறை யரும்பொருள் விரிக்குமலர்
முகமுமொன் றசுரர் குழுமி
மாண்டபோர்க் களவேள்வி வேட்குமா முகமொன்று
மாசற்ற வேடதலைவர்
குலமங்கை வள்ளிபான் மகிழ்வுபா ராட்டியே
குறுநகைசெய் முகமுமொன்று
கூறுமிப் பரிசினுய ராறுமுக மீராறு
குளிர்மலர்க் கரமுமிலகப்
பலவழகு மேவுமொரு பச்சைமயி லேறிவேற்
படைகொண்டு பவனிவருவோய்
பகரரிய கண்டிமா நகரமெனு மொப்பரிய
பதிமேவு கதிரேசனே (2)

மாதவ முயன்றுபெறு தந்தைதா யிருவரிம்
மாநிலத் தென்றுநிலையார்
மக்கள்மனை சுற்றமே தக்கதுணை யாமெனின்
மற்றிவர்க டாமுநிலையார்
காதலொடு பேணிவரு காயமுஞ் சதமன்று
கைவந்த பொருளுநிலையா
கனவுபோ லழியுமுறை கங்குல்பகல் காட்சியிற்
கண்டுகண் டறிவுதெளியாப்
பேதமையி னுலிந்த மண்ணுலக வாழ்வையே
பெரிதெனக் கொண்டுசுழலும்
பேய்மனத் தோடுகுடி வாழ்தலரி தினியதைப்
பிரிதலும் பெரியவரிது
பாதகமொ டெப்பழியு மஞ்சாத நெஞ்சிதைப்
பரிசுத்த மாக்கியருள்வாய்
பகரரிய கண்டிமா நகரமெனு மொப்பரிய
பதிமேவு கதிரேசனே. (3)

சிந்திக்கி லம்மவித் தேகநிலை தானென்ன
செங்குருதி யென்புதசைதோல்
சேர்ந்தநவ வாயில்மனை சிவணுமைம் புலவேடர்
சென்றுலவு கானைிகரும்
வந்துற்ற மோகபசி தாகமுத லானபயிர்
வளருமொரு கழனிமருவும்
மலசலங் கிருமியொடு மல்குபல நோயெலாம்
வந்துகுடி கொள்ளுமிடமாம்
சந்தித்து நின்றுலவு சிறுகாற்று நீங்கிடிற்
சவமெனும் பிணமதாகித்
தள்ளுண்டு சுடலைபோய் வெந்துபிடி சாம்பராந்
தன்மைகண் டின்னுமடவோர்

பந்தித்து நெஞ்சைநின் பாதத் தழுத்தியே
 பரவித் துதிக்கமுயலார்
பகரரிய கண்டிமா நகரமெனு மொப்பரிய
 பதிமேவு கதிரேசனே. (4)

அரியநிதி யுயர்கல்வி யாயுள்புகழ் மனைமக்க
 ளாளடிமை யின்பசுகமாம் [ண்ணி
அன்னபல வொவ்வொன்று மின்னதிது வென்றெ
 யனவரத முன்னரணுகித்
தருதியென நானுனைக் கேட்பதுவு நீயவைக
 டருவதுவு மரியதவருல்
சங்கட மெலாந்தொலைய விங்கடிய னெருசூழ்ச்சி
 சாற்றிடும் முறைமையதுகேள்
வரமவைகள் பலமீது சென்றுலவு மாசையாம்
 மனவவா வொன்றுதனைநீ
மல்காது குன்றவரு ளிஃதொன்று மேசெயின்
 மறுதொல்லை யாதுமிலைகாண்
பரவைமுக டேறுசெங் கிரணரவி போலவொரு
 பச்சைமயி லூர்ந்துவருவோய்
பகரரிய கண்டிமா நகரமெனு மொப்பரிய
 பதிமேவு கதிரேசனே. (5)

கல்விநெடு பரவையிற் கரையற்ற தாதலின்
 கற்றுமுடி வெய்தலரிது
காசுபண மாசைபோ மவ்வளவு தேடிலோ
 காசினியி லதுவு மரிது
தொல்லைதரு பசிதன்னை யொருமுறையி லுண்டபின்
 றேரன்றுது காத்தலரிது
துணைமுலையி னர்கலவி பலமுறை நடாத்தினுந்
 தொடருமயல் போக்கலரிது

மல்குசல மலவாதை மாற்றலும் மிகவரிது
மறையவன் றந்தவுடலின்
வயதுமெத் துணையதோ மன்னுயிர் பிரிந்துபோ
மார்க்கமும் மாயநெறியோ
பல்வகைய கவலைமிகு பாசத் தழுந்துமொரு
பாவிக் கிரங்கவருவாய்
பகரரிய கண்டிமா நகரமெனு மொப்பரிய
பதிமேவு கதிரேசனே. (6)

எண்ணரிய பிறவிதொறு மேதமிகு தீவினைக
ளெண்ணிப் புரிந்தபடியால்
இங்கினிய வாழ்வுசுக மெய்தவிலை யேபிறரை
நோவதற் கிடமுமிலையே
தண்ணுலவு தாமரைச் சதுர்முகன் செய்தசதி
தானென் றியம்பறகுமோ
தாய்ப்பசுவை நாடிவரு கன்றெனத் தங்கள்வினை
தம்மையே சார்ந்துவருமால்
உண்ணெகிழ நின்றுருகி நின்னடிமை பூண்டியா
னுறுதுய ரகற்றமுயலின்
ஒவ்வாது நின்றுபல கலகமிடு நெஞ்சமிதை
யோர்வழிப் புக்கவருளாய்
பண்ணுலவு மினியரச வசனகய வல்லிகுற
வள்ளிதொழ வந்தபதியே
பகரரிய கண்டிமா நகரமெனு மொப்பரிய
பதிமேவு கதிரேசனே. (7)

திருவினல னுயர்தெய்வ யானைமா மணமன்றல்
செய்தநற் பரங்குன்றமுஞ்
சேணளவு வெள்ளிமால் வரையிலினி தென்றுகுடி
சென்றுபுகு செந்திநகரும்

அருமறையி னுரைசொலா தயனிடர்ப் பட்டதிரு
வாவினன் குடியுமணிசேர்
அரியதிரு வேரகங் குன்றுதோ ரூடுபெதி
யதிநல்பழ முதிர்சோலையும்
பெருமைபெறு மிவ்வாறு முனதுபடை வீடென்பர்
பேசிலுன் னிலையுமாறு
பெருமுகமு மோராறு கரதலமு மீராறு
பெருகுவது கருணையாறு
பருவரல்கொ ளெளியனேக் காக்குமா றதுசொலிற்
பலவா றுனக்குமுளவாம்
பகரரிய கண்டிமா நகரமெனு மொப்பரிய
பதிமேவு கதிரேசனே. (8)

மலரவ னமைக்கவொரு மறலியு முடைத்துவரு
மட்கலச மொத்தவுடலம்
மாசகல வாசநீ ராட்டியகி லூட்டிநன்
மணியிழைகள் பூட்டிமறுவில்
கலைபல தரித்தினிய வுணவுக ளருத்தியே
கங்குல்பகல் காத்துவரினுங்
காசினியி னிலையாது கட்டழியு மழிதலெக்
கணமென்று கழறலரிதால்
நிலைமைபெறு தருணமிதை யவமே தொலைக்காம
னெஞ்சகத் துனைநினைந்து
நெடியதவ மாற்றியே கொடியபவ நீக்கிநன்
னெறிகண்டு செல்கவருளாய்
பலவழ கமைந்தகய வல்லியொடு வள்ளிபடர்
பைந்தருப் போன்றபதியே
பகரரிய கண்டிமா நகரமெனு மொபபரிய
பதிமேவு கதிரேசனே. (9)

கந்தகலை யுணர்புலவ கங்கைதரு மைந்தகுக
காங்கேய கார்த்திகேய
கவுரிநந் தனசுப்ர மணியசிகி வாகன
கடம்பகய வல்லிகணவ
சுந்தரநல் வள்ளிமண வாளபா வகிமுருக
சூர்ப்பகைவ வாகுலேய
சுரேசசர வணபவந லறுமுகவ வேலிறைவ
சொற்சிறப் புற்றகுமர
தந்திமுக ஞர்துணைவ தாமோ தரன்மருக
தாருகற் செற்றதலைவ
தமியனெனை யாள்பவா திருவுள மிரங்கியென்
சஞ்சல மெலாமகற்றிப்
பந்தமுய ரிந்தவுட லொருவுநாள் வந்தினிய
பதமுமெற் கருளவேண்டும்
பகரரிய கண்டிமா நகரமெனு மொப்பரிய
பதிமேவு கதிரேசனே. (10)

---

(வெண்பா)

கண்டி நகரக் கதிரேச ஞர்க்கினிய
தொண்டு புரிந்து துதிசொல்வார்க் - கண்டுதுயர்
போயகலு மின்பசுகம் பொங்கிப் பொலிந்துதவ
நேயமுமுண் டாமே நிறைந்து.

சைவ மதமுந் தரும நெறிபலவுஞ்
செய்யபுகழ்ச் செங்கோற் திருமுறையும் - வையமிசை
மாரி முதல வளமு மலிந்தோங்கிச்
சீரடைக நாளுஞ் சிறந்து.

வாழ்கநீ டூழி வளர்க வினியவெலாந்
தாழ்க மறம்பலவுந் தப்பகன்று - சூழ்க
வடிவே னெடுங்கரத்து வண்கதிரே சன்புகழே
நெடுநீர்வைப் பின்க ணிலைத்து.

கதிரேசர் பதிகம் முற்றிற்று.

———

ஒன்பதாவது

மட்டுநகர்க் கொத்துக்குளத்து

# மகாமாரி அம்மன் அந்தாதி



## (முகவுரை.)

வளம்பல கெழுமிய மட்டுநகரின் குடதிசைக் கண்ணதாய்க்கொத்துக்குளமெனப்பெயரியசிறந்தவொருகிராமமுண்டு. அங்ஙனம் கோயில்கொண்டருளிய மகாமாரி அம்மனுக்குநித்தியபூசைமுதலியனவும் வருடவிழாக்களும்கிரமமாகச்செவ்வே நடைபெற்றுவருகின்றன. மருங்குசூழ்ந்துள்ள கிராமங்களினும் பட்டணத்தினு மிருந்து அநேக சனங்கள் இக்கோயிலுக்குச் சென்று வந்தனை வழிபாடுகளாற்றி இஷ்டசித்திகளைப் பெற்றுவருவார்கள். ஆதிவாரங்களினும் திருவிழாக் காலங்களினும் திரளான சனங்கள் குழுவுவதுண்டு.

இங்ஙனமாயினும், முழுமுதற் கடவுளாகிய சிவபிரானோடு சொல்லிடம் பொருந்திய பொருள்போலுந் துணைவியாய்க் கெழுமி யாண்டும் நிறைந்தருள் பராசத்தியாகிய இத்தேவியாரை அநேகர் வரன்முறைதெரியாதுபரிகலத்தலைவியராகவும் உக்கிரகோப முகத்தினராகவும், அம்மை, பேதி முதலிய கொடிய நோய்களை முத்தெறிந்து விளைவிப்பவராகவும் பேதகமாய் விளங்கிஇடர்ப்படுவர். விநாயகரையும் சுப்பிரமணியரையும் போன்று சிவமைந்த முகூர்த்தங்கொண்டருளிய வீரபத்திரர், வயிரவர்களையும் இன்னணமே மயங்கிப் பேய்வகுப்பிற்சேர்ப்பர். அன்றியும், திரௌபதியம்மன், கண்ணகையம்மன் முதலியபத்தினித்தெய்வதங்கள் சேர்ந்துள்ள வகுப்பிலேமுழுமுதற்றேவியாராகிய இப்பெரும் அம்மனையும் சேர்த்து மயங்குவர்.

இவ்வம்மனது (தாமஞ்சிய) கோபத்தைத்தணிக்கு மாறே பிறஎன்கருதியோ வருடச்சடங்கிறுதிநாளில் ஆடு, கோழி முதலியவற்றை அறுத்துப்பரிகலப்பலி இடுவர். இவ்வழக்கம் பண்டுதொட்டுப்பலதேசங்களில் பயின்றுவந் தும் இக்காலத்தில் ஒழிக்கப்பட்டுவருகின்றது.

ஒரு தேவதைக்கு உயிர்க்கோழியை அறுத்துப்பலியூட் டுதல் பாவமென்றஞ்சி மாவினால் ஒருகோழியைச்செய்து பலிகொடுத்தவேந்தொருவன் மாக்கோழியைவதைத்த அக் குற்றத்திற்காக அநேக புன்பிறப்புகள்எய்தி வருந்தின னென்று சரிதங் கூறும். அன்றியும் வேள்வியின் பொருட்டு பசுவதைமுதலியன பண்டையயுகங்களுக்கமைந்தன வென் றும் இக்கலியுகத்திலே எவ்வகை உயிர்க்கொலையும் தவிர்க் கப்படவேண்டுமென்றும் எல்லாத்தருமசாஸ்திரங்களும் வற் புறுத்திக்கூறாநிற்கும்.

ஆதலின் கொத்துக்குளவாசிகள்இவ்விடயத்தை ஆலோ சித்து இதுகாறுஞ்செய்துவந்த கொடுந்தொழிலாகிய உயிர்ப் பலிகொடுத்தலை இனியாவது நீக்கிவிடுவாராக. குளிக்கப் போய்ச்சேறு பூசுவாரில்லை. தேவாலயவழிப்பாட்டால் பவக் குவையைக் குறைக்கநினைந்துமுயன்று செய்கைவிகற்பத் தால் அதனைவளர்த்துக்கொல்வது பேதமையேயாம். அம்ம னுக்கென்று நினைந்து கைலஞ்சங்கட்டுவதுபோல்பிணிநீக்கற் பொருட்டு ஆடுகோழி முதலியவற்றைநேர்ந்தனுப்புவோர் அப்பெருமாட்டிக்கு இவைகள்வேண்டுவனவல்ல என்பதை உணர்வாராக. நண்பர் ஒருவர் நற்சுகம்வேண்டி அம்மனைத் தியானித்தற்பொருட்டு, பொருண்மறைவின்றி வெளித் தோன்ற, அரும்பதத்தொடர்களை அமைக்காது செம்பாக மாக ஓர் அந்தாதி செய்துதருகெனக்கேட்டமையின் இந் நூலைஇம்முறையில் இயற்றிக்கொடுத்தாம்.

மட்டுநகர்
15-6-1922

இங்ஙனம்
ச. பூபாலபிள்ளை.

## காப்பு

வித்து விளைகழனி மென்மலர்ப்பூங் காவுமிளிர்
கொத்துக் குளக்கோயில் கொண்டருளி-சித்திதரு
மம்பிகையா மாமாரிக் கந்தாதி யான்பாடத்
தும்பிமுகத் தேவே துணை.

## நூல்

தும்பி முகவன் றுணைவிய ரன்று துணைப்பிறந்த
தம்பி குகன்றிருத் தேவியர் பார்ப்பதி சாம்பசிவ
னம்பொ னரியயன் வாணி முதலோ ரடிபரவி
யிம்பர் மிசைமக மாரியந் தாதி யியம்புவனே (1)

புவனங்கள் யாவையும் பொற்போ டமைத்துப் புரந்தொடுக்
சிவனங்க மோடொரு பாதியு மாகித் திகழடியர் [குஞ்
பவனங்கொ ளாறு படரப் பொருத்திப் பலவுயிர்மாட்
டவநங்கொ ளம்மை மகமாரி யென்னைவந் தாண்டருளே (2)

அருளா யெனக்கென்னி லாதரிப் பாரில்லை யாருமினித்[தால்
தெருளா துளஞ்சென்று செய்வதெல்லாம்பெருந் தீமைய
வருவாயுங் குன்றி வறுமையுந் துன்பமும் வந்துறுத்துந்
திருவேயென் னம்மை மகமாரி யானினிச் செய்வதென்னே

செய்வதென் னேகதி சேர்க்குந் தவமெனிற் சென்றபவச்
செய்கையி னீடிய பாவங்கள் யாவுந் திரண்டடர்ந்து
மெய்தனை வாட்டலி னம்மா களைத்தனன் மேனடந்திங்
குய்வழி காண்கில னின்பா லிரப்ப துதவியன்றே (4)

அன்றொரு தக்கன் மகளாகிச் செய்த வருந்தவத்தைக்
கொன்றையங் கண்ணியன் காபால சங்யாச கோலமுடன்
சென்றே குலைத்துக் கரம்பற்றக் கற்புத் திரண்டொருவா
ளென்றே யுறவெடுத் தன்னோன் றலையை யெறிந்தனையே (5)

எறிதலுஞ் செங்கீர் கடல்போ லெழும்ப வெழுந்துசினம்
பிறிதொரு பேதி வடிவோ டுலகைப் பெரிதுறுத்த
வறுமுகன் றன்னைக் குழந்தைபோ லாக்கி யமலனின்சீர்
செறிமடி மீது கிடத்தினன் கோபந் தெளிந்தனையே (6)

தெளிந்தனை யன்றே மரக்மு நீங்கச் செகதலத்தோர்
குழந்தையைக் காத்த வராயனென் றேத்திக் குதூகலமாய்
வளந்திக ழுன்பேர் மகமாரி யென்று வகுத்துரைப்பத்
தளந்திக ழுலர்தூய்ப் பணிந்தனர் தேவர் தவத்தருமே (7)

தவத்தரன் முத்துப் பதினெண் வகைதரத் தாதியர்பாற்
பவத்துறை போவார்க கெறிமினென் றேவிப் படியிலறஞ்
சுவைத்துறச் செய்த மகமாரி யேயுன் றுணையமையின்
நவைத்திர ணீங்கி நலம்பலிப் பாகுமெந் நாளினுமே (8)

நாளுஞ் சுகமுளர்க் கோராண்டு செல்வது நாழிகைபோ
லாளும் பிணியினர்க் கோர்நாழி செல்வது மாண்டளவால்
வாளிற் சிறந்த வரிவிழி யேமக மாரியெனை
நீளப் பிணியில் வருத்திவைத் தாட்டுமு னீதியென்னே (9)

நீதியென் றாகினுந் தாயே மனஞ்சற்று நீபொறுத்திங்
காதரிப் பாயென்னி லாரார் பகைவந் தடுத்துமெனை
வாதிப்ப தில்லை மிடியில்லை நோயில்லை வஞ்சகவூழ்
சாதிப்ப தில்லையெந் நாளுஞ் சுகம்வந்து சார்ந்திடுமே (10)

சார்ந்திடு மவ்வவர்த் தேடியவர்விதி தாய்ப்பசுவைத் [யக்
தேர்ந்தணை கன்றெனச் செப்புவர் தீயைச் செழும்புனல்போ
கூர்ந்தவித் தாங்கு குளிர்சா லுனது கொழுங்கருணை
யார்ந்தவந் தீர்க்குமு னம்மா பவத்தொடர் ரற்றிடுமே (11)

அற்றிடக் கோப மடியார்க் கடிமை யதுபுரியக்
கற்றிடக் கோதில் கலைபல வாய்ந்து கறையினடை

யுற்றிட மாதவ மோம்பச் சிறியேற் குதவுவையேற்
பெற்றிட வன்னே மகமாரி மேலினிப் பேறிலையே (12)

பேறுகள் பற்பல வேண்டுவர் மீட்டும் பிறப்பினசை
யேறுநர் முத்தி விரும்புமெ ஞயு ளிறும்வரையுந்
தேறுத றேக சுகமு ணுடையிவை தேவையலான்
வேறினி யம்மை மகமாரி யான்பெற வேண்டிலனே (13)

வேண்டும் பிறபல போகங்கள் வேண்டி விழைந்தடைந்து
மாண்டும் பிறழ்ந்தவை நில்லாமை கண்டிங் கலுத்தயர்ந்தே
னீண்டும் பிணியொன்றை யேதடுத் தாலஃ தெற்கமையுங்
காண்டற் கரிய மகமாரி யேசுகங் காட்டுதியே (14)

காட்டுக நற்சுகங் காசினி வாழ்வு கனவிலழி
பாட்டுடைத் தென்றுமுன் பாதங் கதியென்றும் பத்தியுறத்
தீட்டுக வெனமயற் சிந்தையில் வந்தணை தீங்குகளை
வீட்டுக வோட்டி மகமாரி தெய்வ வியன்மணியே (15)

மணியே மணியிற் குலவொளி யேமணி மாநிலத்தி
னணியே யணியுயிர்க் காருயி ரேநல் லறிஞருளத்
துணிவே துணிபவ ருள்ளிரு ளோட்டுஞ் சுடர்விளக்கே
பணிவே னுனைமக மாரியென் றேத்திப் பலமுறையே (16)

முறையே முறையெனக் கூவினு மம்மையென் முன்னடை
குறையே தெனக்கதை கேட்டிலைகுற்றக் கொலைபுரியுந்[ந்து
கறையோ னெனினுங் கடலிடைத் தாழிற் கரமுதவித்
துறைசேர்த் திடுவது நல்லோர் கடனெனச் சொல்லுவரே()

சொல்லுவ கேட்டுத் துயரறுத் தாண்டு சுகமுதவ
மெல்லிய லாய்மக மாரியு னெஞ்சின் விருப்பிலையேற்
செல்லுக வேற்றிட மென்றே யுரைத்துத் திருப்பிவிடல்
நல்லதன் றேபிற வள்ளலைத் தேடியு நாடுவனே (18)

நாடவு மொட்டிலே பற்பல வாறு நயந்துரைத்துப்
பாடியு மாடியு மேத்தியும் போற்றிப் பணிந்திடினும்
மூடிய வாய்திறக் கின்றிலே முத்த முதிருமென்றோ
வாடிய சிற்றிடை யாய்மக மாரி மடப்பிடியே (19)

பிடியேது மில்லேப் பிறகரி யில்லேயுன் பேரில்வழக்
கடியேன் முயன்று தொடுத்தாலு மாரிங் கதைவிளங்கி
நடுநீதி சொல்லுவர் நாட்டி லரசு நடைபெறினும்
மிடியாளர் செல்வர்க்கு வெவ்வேறு நீதி விளேந்திடுமே (20)

விளேந்தகல் பண்ணேயு மென்மலர்க் காவும் விரிந்தபுனற்
குளந்திகழ் சாரலுங் கூடிய கொத்துக் குளப்பதியி
லளந்தள வெல்லேக் கடங்காத கோயி லமர்ந்தரசு
வளந்தரச் செய்யு மகமாரி யேமனம் வைத்தருளே (21)

வைத்தருண் மாரி மகமாரி யம்மை மலேமடைந்தை
யுத்தம வையை யுமையவள் தேவி யுருத்திரைநற்
றத்துவ சங்கரி சாம்பவி யம்பிகை சத்திசிவை
பத்திகொ ளரி பருப்பதி வல்லி பகவதியே (22)

பகவதி யந்தரி யாமயி ராணி பவானிபரை
சுகவதி யாரியை நாயகி முக்கட் சுடர்முகத்தி
யகவதி மாதா மரகத வல்லி யரனிடத்தா
ளுகவதி காமநற் கோட்டியென் றுன்பெய ரோதுபவே (23)

ஓதுப வின்னு மகமாரி நின்னே யுலகுணரத்
தீதகன் மூவகை யைவகை யாறேழ் செறிந்தவகை
பேதகச் சத்திக ளாகப் பிரித்துப் பெயர்கொடுத்து
மாதவத் தோர்பணிந் தேத்துவ ரிந்த மகிதலத்தே (24)

மகிதல மென்படும் வானஞ் சுருங்கி மழைகுறையின்
சுகிதனப் பாலறின் கையிற் சவலேயுஞ் சோர்ந்திடுமே

அகிறனே யுண்டு மூகிலோ டளாவி யறற்கடிந்து
வகிருறுங் கோதை மகமாரி நீவிடின் வாடுவனே (25)

வாடுவ திங்கெ னுடல்கொண்ட நோய்செய் வருத்தமதாற்
றேடுவ துன்றிருப் பாத சகாயஞ் சிறிததுகை
கூடுவ தின்றெனி லாயே குறைபழி யாவுமுன்மேற்
போடுவ் தன்றிமற் றூர்க்கெடுத் தோதிப் புலம்புவனே (26)

புலம்பொலி காதிற் புகவிலே யோபுகப் போம்பொழுதுன்
சிலம்பொலி வாழுஞ் செழுமலர்க் காவிற் றிரளளிக
ளலம்பொலி கூடி யவித்ததுண் டோவஃ தங்ஙனமேல்
நலம்பெறு மாறெவ னங்காய் கவுரிநன் னுயகியே (27)

நாயகி யேநச் சரவணைப் பள்ளி நயந்துவளர்
மாயவ னுருக் கிளையவ ளேமக மாரியன்னுய்
தாயகன் கூவித் தவித்தழுங் காலவன் றுயடைந்து
பாயச மூட்டிப் புரத்தலன் றேமண் பயில்வழக்கே (28)

வழக்கமென் னேவெனி னேரேழை வந்து வரமிரந்தாற்
புழுக்கமற் றீதல்மற் றல்லாது போவென்னல் பூவுலகத்
தொழுக்கமிவ் வாறிதற் கொவ்வாது மாரிந லுத்தமியே
பழக்கமில் லாதவர்ப் போலே மறைவதென் பாவமிதே (29)

பாவம் பலபயின் றேனென வென்மேற் பழிசுமத்தி
னேவெங் ககன்றனே யானுன் சிறுரு ளொருவனன்றே
யாவும் மருங்கிருந் தேகண்டு நல்வழிக் கிட்டிலேயால்
மேவும் பழியி லொருபாதி நின்றலே |மேல்வருமே (30)

மேல்வரு சென்மந் தடுப்பது மிங்கு விளைந்தவுடற்
பால்வடு குற்றங்க டீர்ப்பது முன்பெரும் பாரமன்றே
கால்வரத் தெங்கி னுதிர்கா யுடைந்து கதித்தெழுநீர்
சால்வருங் கொத்துக் குளப்பதிக் கோயிலேச் சார்ந்தவளே ()

சார்ந்து தருவைக் கெடுபுல் லுருவி தனைநிகர்த்துச்
சேர்ந்து கெடுக்குந் திருடருண் டேநற் செழுங்கருணை
கூர்ந்து சிறிது துணைசெயும் பேரிலைக் கொங்கலர்ப்பூ
வார்ந்த குழலி மகமாரி யேயு னடிசரணே (32)

சரணே யுனது திருவளர் தாமரைத் தாளிரண்டு
மரணு யமைந்திடி னஞ்சுவ னேனும னண்டிடினும்
முரணு யெவர்வந் தெதிர்ப்பினு முட்டி முருக்கிடுவேன்
கருணு கரக்கடன் மாரிநல் லாய்சிவ காதலியே (33)

காதல ரன்பில் கயவரென் றெண்ணிக் கதிர்மதியம்
பேதகஞ் செய்தில பெட்புயர் மாரிப் பெயரணிந்த
சீதளக் கொண்டலு மாறின்றி நல்கிடுஞ் சிந்திமழை
பூதலத் தம்மநீ கன்னெஞ்சம் பூண்ட புதுமையென்னே(34)

புதுமைப் பணம்படைத் தோரிடம் போந்து பொருளிரந்தா
லதுகைக் களிக்கார் கடன்முறை கேட்பி னதனிரட்டி
இதயத் திசைந்த பலவீடு கேட்ப ரிவரியலின்
விதமெப் படியிருந் தாலுமுன் போக்கொரு விந்தையதே ()

விந்தையன் றேரவிசும் பேறிக் கலைவிரி வெய்யவனைச்
சந்திரன் றன்னையுங் காதணி யாகத் தரித்தரவைச்
சுந்தர மாலைக ளாகவுந் தூக்கிச் சுடுவடவைக்
கொந்தழற் றீநடுக் கும்பத் திருக்குமுன் கொள்கையதே ()

கொள்கைக ளோபல மார்க்கமுங் கோடி குவலயத்தி
லுள்ளன வாமவை யோடையி லோடி யொருகடலாந்
தெள்ளிய வண்சிவ மார்க்கம் புகுமச் செழுங்கடலு
முள்ளிய மாமக மாரிநின் காணிழற் குய்த்திடுமே (37)

உய்த்துணர்ந் தாலிவ் வுடலுரு வேறி யுலகசுகந்
துய்த்தபின் மூப்புத் துயர்பிணி சூழச் சுமந்தழியும்

பொய்த்திறத் தாயது போமுன் புதுமலர்ப் பூங்குழலாய்
மெய்த்தவ மாற்ற விருப்பளிப் பாய்முத்தி மேவுதற்கே (38)

மேவுதற் கேசிவ லோகத்து வாழ்வினை மேயசடம்
போவதற் கேமுனம் புண்ணியஞ் செய்யப் பொலிகுழலா
யாவதற் கேற்ற வழியெனக் கோதி யருகிருந்து
காவதற் கேற்ற கருணையுன் பாலுண்டு கண்டனனே (39)

கண்டுகொண் டேன்மனை கன்றொடு காலியுங் காணிமுதன்
மண்டிய செல்வமும் மாதர்தம் போகமு மற்றுமெலா
மண்டியு மென்று நிலையாம னீங்குமென் றுதலினாற்
கொண்டலை வென்ற குழன்மாரி நின்பாற் குறுகினனே (40)

குறுகிவெங் கூற்றுவ னென்னு ருயிரைக் கொண்டுசெல
வெறிகதிர்ச் சூலமு மேந்திவந் தாலுயி ரென்படுமோ
அறிவழிந் தாகம் பதைபதைத் தஞ்சி யலமருமே
செறிமலர்க் கோதை மகமாரி வந்தருள் செய்குவையே (41)

செய்வகை யேது மறியாம லேழை தினந்தினமும்
பொய்வகை பேசிப் பொறிவழிப் போந்து புவிபழிப்ப
மெய்வகை நீக்கி வெறியரிற் காலத்தை வீண்விடுதேன்
மைவரிக் கண்ணி மகமாரி காக்கமுன் வந்தருளே (42)

வந்தரு ளாவிடின் வாதையி னீங்க வழியறியேன்
சுந்தரி யேமக மாரிநல் லாய்சுடர்த் தூமணியே
கந்தனைக் காதல் வயிரனை வீரனைக் கற்பகமா
மைந்தனை நல்கிப் பகைமுடித் தாண்ட மலர்க்கொடியே (43)

கொடியோர்க் கருள்வதுன் கொள்கையன் றுமெனிற்கூர்ந்த [சினம்
மடிமேற் குழந்தைகண் டாறி மரக மதுதடுத்துப்
படிகாத் திரங்கிய பான்மையு மென்னோ பருவரலுற்
றடிசார்ந் தவரெவ ராயினுங் காப்ப தறமுறையே (44)

அறமுறைச் சேற விரும்பு மகத்தையு மாணவம்போய்
மறமுறைச் செல்கென மாற்றி வெருட்டி மயக்கிடுமால்
புறமென வுள்ளென நீங்கா துயிர்தொறும் போதமென
நிறைமக மாரி யெனைத்தடுத் தாள்வது நின்கடனே (45)

கடனு யொருமடக் கிள்ளையைக் காக்குங் கருத்துடையா
ருடனே கொலைபுரி பூனையைக் கூண்டு ளுறவிருத்தார்
மடனேர் விழிமக மாரியிவ் வாணவ மாமலத்தைத்
திடனு யெனதிடஞ் சேர்த்துவைத் தாயென்ன தீவினைக்கே

தீவினைக் கேயெனை யாளாய்ச் செலுத்தத் திருடிழைக்கும்
பாவிக ளைம்புல வேடருஞ் சூழ்ந்து பழிவிளைப்பார்
காவியங் கண்ணி மகமாரி நீகடைக் கண்கணித்தால்
மேவியிங் கேவரு மெல்லாச் சுகமு மிகப்பொலிந்தே (47)

மிகப்பொலி வாகிய போகங்கள் மேவினு மெய்யதன்பாற்
சுகப்பொலி வின்றெனி லையோ பிறர்கொண்டு துய்த்திடுவ
ரகப்பைபுக் கள்ளிய சோற்றைமற் ருேர்பெற் றருந்துதல்போற்
சகப்பையித் தேகத்தைத் தாங்கலு மிக்க தளர்வுடைத்தே ()

தளருடைத் தாகிய நாள்வரு மென்று தவமுயலா
விளருடைத் தாகிய காலத்தை வீணில் விடுத்தனுல்
மிளிருடைத் தாய்மக மாரியுன் காலில் விழுவலின்றே
குளிருடைத் தூமலர் கொட்டிப்பணிந்து குறையிரந்தே(49)

குறையிரந் தேனின்று முன்னுட் புரிகுறை கோடியவை
முறைதெரிந் தோதற் கடங்கா மொழிகளு முற்றுமுரு
சிறைவிரிந் தாடு மயிலன்ன மாரியுன் சிந்தையிலே
நிறைதெரிந் தேயவை யாவும் பதிந்துண்டு நிச்சயமே (50)

நிச்சய மாகமுக் காலமு மோருமுன் னெஞ்சகத்துக்
கிச்சகத் தென்பிழை யோமறை யாத லெடுத்தெடுத்துக்

கொச்சையச் சொல்கொண்டு கூறியென் னுமருள் கூர்ந்திலையே
லெச்சுகங் காணுவ னேமக மாரி யிளங்கொடியே. (51)

இளங்கொடி மார்தரு போகஞ் சதமென வெண்ணியதா
லுளங்கவர் கானலை நம்பிக்கை நீர்கவிழ்த் தோடுவர்போல்
வளங்கெழு கைத்தவ மாய்த்தவர்ப் பின்னர் மருண்டயர்ந்தேன்
றுளங்குளந் தேற்றி மகமாரி செய்தி துணையெனக்கே. (52)

துணைவரு சுற்றமென் செய்திடுங் கூற்றுத் தொடர்பொழுதி
லணைநதி குக்கலின் வால்பற்றி நீந்தற் கமைந்திடுமோ
கணைதனை வேலைக் கயலினை நீலக் கடிமலரைப்
பிணைதனை நேர்விழி மாமாரி யேயெனைப் பேணுதியே. (53)

பேணுதி பேணுதி யென்றே பெருகும் பிரியமுடன்
வாணுத லம்மை மகமாரி நின்னை வணங்கிடினுங்
காணுதி யென்று வருகிலை பொல்லாக் கசடனென்று
நாணுதி யோவிதை நானிலங் கேட்பி னகைத்திடுமே. (54)

நகைத்துரை யாடினுங் கீழோ ருறவு நயமிலதாம்
பகைத்துரை யாடினும் மேலோ ருறவு பயன்றருமால்
மிகத்துதி சான்ற மகமாரி யேதவ மெல்லியலா
யிகத்துயர் போக வுனையே நிதம்பணிந் தேத்துவனே. (55)

ஏத்திப் பணிவ துனையே நிதமு மிறைஞ்சிமலர்
சாத்திப் புகழ்தலு முன்ற ளிணையைத் தகைமையுறக்
காத்துப் புரிதலு முன்றொண்டர் தொண்டினைக் காவினலர்
கோத்துப் புனைகுழன் மாமாரி யேபொற் குயின்மொழியே ()

குயின்மொழி மாதர்தங் கூட்டுற வெல்லாங் குவலயத்திற்
செயிர்தரு மென்று பலவாறு கண்டு தெளிந்திருந்தும்
மயலுறு விட்டி லெரிசுடர் வீழ்ந்து மடிவதுபோற்
றுயர்புகு வேனை மகமாரி காத்துத் துணைபுரியே. (57)

புரிவினைக் கேற்ற பலனே நுகரப் பொருந்திவரும்
விரிபுலத் திட்ட விதையின் குலமே விளைவதுபோற்
சுரிகுழற் றேகை மகமாரி நின்னருள் சூழுமெனி
லெரிமுனர்ப் பஞ்சி னெழுபவத் தீங்கு மெரிந்தறுமே. (58)

எரிந்த வநங்கனை யீசன் பொறுத்திங் கெழுப்பினனே
சரிந்த மகத்தமர் தக்கனை வீரனுந் தந்தனனே
பிரிந்த குமரனை நீயும் பொறுத்துப் பேணினையே
வரிந்த குழன்மக மாரியென் குற்றம் மறந்தருளே. (59)

மறந்தருள் செய்தல் மரபன்று நீதி வழுவுமெனிற்
பிறந்திடச் செய்யும் பிரமற்கு மீண்டு பிரித்துடலை
யிறந்திடச் செய்யு மியமற்கு மோய்வின்றி யேவலிட
லறந்தனக் கேற்றதன் றேமக மாரியென் னன்னையரே. (60)

அன்னை கருவி லமைந்துற்ற நாண்முத லங்கிருந்து
பின்னை யுலகிற் பிறந்திந்த நாள்வரை பேசிலுள
முன்னுங் கவலை யுழைப்பிற் கவலை யுவந்தவெலாம்
மன்னுங் கவலை மடியாக் கவலை மகேஸ்வரியே. (61)

வரிசேர் விழிமக மாரிநின் னேடு வழக்குரைத்துச்
சரிபோ யினும்பிற தாழ்வுவந் தெய்தினுந் தாரணியோர்
சிரியா ரெனையினி யேழையென் றெண்ணிச் சிறிதிரங்கிக்
கரையா திருக்குமு னெஞ்சத்தின் மேற்பழி கட்டுவரே. (62)

கட்டும் மனைபொரு ளாதிய யாவையுங் கைகடப்ப
விட்டுப் பிரிகின்ற வேளையி லோர்வரம் வேண்டுவல்யான்
தொட்டுக் கயிறொடு சூலமுங் கொண்டு தொடரியமன்
கட்டுக் கமைய விடா துகொண் டேகெனக் கையெடுத்தே. ()

எடுத்தவ னேசுமை யேந்தற் குரியவ னெனினுமவற்
கடுத்தவ னோர்கை கொடுத்தாங் குதவ லமையுமன்றோ

மடுத்துயர் காதள வோடியு மீண்டு மறுகிவிடங்
கடுத்துயர் கண்ணி மகமாரி யென்சுமை கண்டுதவே. (64)

கண்டு தயவோ டுதவுத லுத்தமங் காலடிவந்
தண்டி யிரப்பவு மில்லையென் றேத லறவிழிவாம்
பண்டை விதியிது பாகையுந் தேனையும் பாலையுங்கற்
கண்டையும் வென்ற மொழிமக மாரி கனிந்தருளே. (65)

கனிந்து முகில்கொளக் குன்றுது வெள்ளக் கடல்குறைந்து
புனைந்து வளர்கற பகமீந்து வண்மையிற் பொன்றிவிடா
தினைந்து வருபவர்க் கேது முதவி னினியுனக்கு
நினைந்து வருகுறை யாதுகொன் மாரி நிகழ்த்துதியே. (66)

துதியே வசையின்ப துன்பங்கள் சூழ்ந்துறல் தொல்பவத்து
விதிபோ லமைந்தென்ப வாயினுஞ் சேற்றிடை வீழ்குறையை
நதிபாற் கழுவுதல் போலுன் கருணை நதிசுரப்பி
னதுபாற் கழுவுவன் மாரியென் குற்ற மடங்கலுமே. (67)

அடங்காத வன்னெஞ்ச கோபிக ளாயினு மடிக்கடிபோ
யிடங்காலங் கண்டு தொழுதா லவருள மேயிரங்கி
விடுங்கோரவ முண்மையின் வேல்விழி மாரி விரைந்தடியேன்
படுங்கோலங் கண்டுவருவாய்மு னெஞ்சிற் பரிவுகொண்டே.()

பரிவுகொண் டண்டங்கள் யாவோடு மொன்றிப் பரந்தகன்று
விரிவுகொண் டாய்மக மாரியுன் மேன்மை விரித்தெடுத்துத்
தெரிவுகொண் டோதுந் திறமெவர்க் குண்டு திசைமுகனும்
பிரிவுகண்டானலன் யானோ சொலத்தகும் பெற்றியனே.(69)

பெற்றியுந் தோற்றமுங் கல்வியுஞ் செல்வமும் பேரழகும்
முற்றுமுண் டாயினுஞ் சின்னாளி லுயுண் முடிந்திடுங்கால்
பெற்றிடும் வாழ்வென்னை யோமக மாரி பெரும்பதவி
யுற்றிட வேண்டி னறமொன்று மேயவ னுய்த்திடுமே. (70)

உய்த்தனை யிவ்வுடற் பாலெனை மாரி யுலகசுகந்
துய்த்திடற் கன்றற மோம்பிப் பிறவித் தொடரறுத்து
மெய்த்தவ முத்தியை மேவுதற் கென்றே மிகமுதிர்ந்து
பொய்த்துயர் வேட்கை மயக்கா லறங்கள் புரிந்திலனே. (71)

புரிந்தில னோர்வகைப் புண்ணிய மேனும் புரிமுறையுந்
தெரிந்திலன் மேலினிச் செய்வதெல் லாம்பல தீங்குகளால்
வருந்துயர் போக்கெனக் கூசாது கேட்கவும் வாய்வருமோ
முருந்துறழ் வாணகை யாய்நெஞ்சமேத்தும் முதல்வியென்றே()

முதல்வியென் றம்ம வுனையேமும் மூர்த்திகண் முன்வணங்கிப்
பதவிபெற் றேறினர் பன்னுன் குலகப் பகுப்புகளுந்
கதிர்மதி யோடு ககனத் தடர்ந்த கணத்திரளும்
பொதுளியுன் னுகப் பணிகளாய் நின்று பொலிந்திடுமே.(73)

பொலியிற் பலவள னேசரிற் சூழ்ந்து புகழ்வரெலாம்
விலகிற் பழமற நீங்கும் பறவையின் விட்டகல்வார்
பலரித் திறத்தினர் தம்மோ டிணங்கிப் படிறிழைத்து
மலைவுற் றலைந்து வருந்தாது மாரி மடுத்தருளே. (74)

மடுத்துக் கொலைகள வாதிய செய்குநர் வஞ்சகம்பொய்
யெடுத்துக் குறைவசை சொல்பவர் கட்கு திவைவிழைவோ
ரடுத்துக் கெடுப்பவ ரன்னவர் தம்பா லமையுறவு
தொடுத்துப் பழிவிளை யாமனன் மாரி துணைபுரியே. (75)

புரியுங் குறைகளை நீயே யிரங்கிப் பொறுத்திலையேல்
விரியும் பிறவித் துயரறுத் துய்யும் விதமெதுவோ
சரியுங் குழலுடைத் தாய்மக மாரி சடத்தினுயிர்
பிரியும் பொழுதுவந் தாயினுங் காத்தல் பெருங்கடனே.(76)

பெருங்கட னீந்துதற் காற்று தலமரும் பேதையைப்பின்
மருங்கடர் மச்சங்கள் வௌவி யிழுத்து வருத்துதல்போ

லொருங்குட னீடிய வைவரு மென்னை யுலைப்பரென்றால்
வருங்கட னீந்து வகையேது மாரி வகுத்தருளே. (77)

வகுத்தென் றலைமிசை வாழ்விதி தீட்டிய மாமலரோன்
பகுத்தறி வின்றியென் பாவப் பரப்பைப் பகாதொருங்கே
தொகுத்துற வேற்றிச் சுமத்திவிட் டானிச் சுமைப்பொறையால்
மிகத்தளர் வாகினன் மாமாரி காப்பதுன் மேற்பொறையே.()

பொறையைச் சுமந்து சுமந்தயர் வாகிப் புலம்பளியேன்
குறையைத் தவிர்த்துக் கொடுப்பவரில்லாக் குறையதனுற்
பிறையைக் கடிந்து மிளிர்வா ணுதலி பெரும்புவனத்
திறைமைக் கிழத்தி மகமாரி யுன்னை யிறைஞ்சுவனே. (79)

நேரும் பகையு மறவோர் கவிகை நிழலிருந்து
சீரும் பரவச் செகமுழு தாண்ட திறன்மகிபர்
யாரும் மடிந்தன ரென்னே புவியி னியனிலையைத்
தேரின் மிகச்சிறி தேமக மாரி சிவக்கொழுந்தே. (80)

கொழுந்து தழுவிய கொம்பொடிந் தானில மேற்குலைந்து
விழுந்து படுமினி வேறே படர விதமுளதோ
வழுந்து னடிமலர்ப் பற்றினை யான்விட் டகலுவனேற்
குழைந்து கெடுவலம் மாமக மாரி குயின்மொழியே. (81)

மொழியுங் கருவிற் புகுந்தாங்கு பட்ட முழுவருத்தம்
கழுவிப் புவியிற் பிறந்துழிப் பட்ட கனிவருத்தங்
குழவிப் பருவ முதற்கிழங் கொண்ட கொடுவருத்த
மெழுதிப் படிக்க மகமாரி யாவர்க் கியலுமன்றே. (82)

இயலுந் தருமங்க ளொன்றேனுஞ் செய்தில னென்றுமினிப்
பயிலும் பவங்களுக் கோரள வேயிலைப் பாசமொடு
மயலும் பிறழவெ னெஞ்சத்தை நல்வழி மாற்றிவிடின்
கயலும் பிறழ்விழி மாமாரி கோடி கனதியுண்டே. (83)

உண்டாய செல்வமுந் தேக சுகமு மொருங்கழியக்
கொண்டாடிக் கள்ளுண் பவரோடு கூடுங் குழுவகன்று
கண்டாடு சொல்லி மகமாரி நின்பொற் கழலிணைக்குத்
தொண்டாகி வாழும் படிசெய்ய வேண்டுந் துணையிருந்தே. ()

இருந்தாவ தென்ன மனைமக்கள் சுற்ற மியமனுயிர்
பருந்தோடிப் பற்று பறவையிற் கொண்டு படரளவில்
வருந்தாது மீட்க வகைதெரி யாருடல் மண்ணிதற்கே
விருந்தாகு மம்ம மகமாரி நின்கடன் மீட்பதுவே. (85)

பதுமா சனத்தனும் பாற்கடற் பள்ளி பயில்பவனு
மிதுமா முடிகழ லென்றுண ராத வெரிப்பிழம்பா
யதுநா ளடர்ந்த வரனிடப் பாகத் தமர்ந்துவளர்
மதிமா முகத்தி மகமாரி தேவி மகேஸ்வரியே. (86)

வரிசேர் தடங்கண் மகமாரி நின்பொன் மலர்ப்பதமே
கரைசேர்த் திடவல்ல கைப்புணை யென்று கருதிமனம்
பரிவசய்ப் பிடித்தன னீயெனைத் தள்ளிப் பதறவிடி
லரிதாம் பலபிறப் பாழியின் மூழ்கி யலைகுவனே (87)

அலையாம லைந்தெழுத் தோதியுன் பாகத் தரனுடனே
நிலையாக நின்னையு நெஞ்சகத் தேற்றி நிறுத்துவனேல்
பலகோடி துன்பங்கள் மாமாரி பற்றிப் படர்ந்திடினுந்
தலைமாறி யோடெனப் பின்பிடித் தேபிடர் தள்ளுவனே.(88)

தள்ளிப் பவங்களை நன்னெறி சார்ந்து தவமுயலார்
துள்ளிக் கவர்ந்திரை தூண்டிலிற் சிக்கித் துடிகயல்போல்
மெள்ளப் பதுங்கி வரும்யம தூதர் விடுங்கயிற்றில்
வள்ளைக் குழைமக மாரியட் டேங்கி வருந்துவரே. (89)

வருந்தும் படியென்னை வைப்பது வஞ்ச மனமதுபோய்க்
கரந்துந் துயிலிடைக் கண்ணெழ வந்து கலுழவைக்குந்

திரிந்தும் பலபல கூத்துக ளாட்டுஞ் செகதலமேற்
பிரிந்து மிருப்ப மகமாரி வல்லபம் பெற்றிலனே. (90)

பெற்றிலன் பேறுக ளுன்பா லிரந்து பெறுவதற்கு
நற்றவஞ் செய்தில னுயே னிழைத்த நவையனைத்து
முற்றெனை வாட்டலி னேவா திரங்கி யுழலுகின்றேன்
சற்றினி யாயினு மாமாரி காத்தல் தகுமுனக்கே. (91)

உனக்கே குறைகளை யொன்றொழி யாம லுரைத்துமனந்
தனக்கே சுகம்பெற வேண்டுமென் றேத்திச் சரண்புகுந்தா
லெனக்கோ ருறுதியுங் கூறிலை மாரி யிதுவுலகந்
தனக்கோ சரிவரப் போகாது வீண்பழி சார்ந்திடுமே. (92)

மேவும் பிணிதுயர்க் கோரள வில்லை விளைத்தவற்றை
ஏவும் பழமைய வூழுக்கு மோர்தடை யென்றுமிலை
நாவுந் தழும்புற வேத்துமிவ் வேழை நலமடையக்
காவும் பொருகுழன் மாரியென் றேவரங் கைவருமே. (93)

கைவரக் கிட்டிய லாபங்க ளெட்டிக் கலைந்தகலப்
பொய்யெனத் தூரத்தி னின்றவை கூடிப் பொருந்துதலும்
மெய்யெனக் கொண்டவை பொய்யாக மாறி விரவுதலும்
வையகப் போங்கென்று மாமாரி கூறுவர் மாதவரே. (94)

மாதவ மேசெய்து வாழச் சிறந்த வழியிருந்தும்
பாதக மேசெயற் கேவுமிப் பொல்லாப் பழிமனத்தின்
தீதுக ணீங்க மகமாரி செய்து திருத்திவிடி
னேதொரு தொல்லையு மில்லாது வாழ்வ லினிதிருந்தே. (95)

இருந்தாலுந் தூங்கி யெழுந்தாலு மற்றெவ் விடமிடமாய்த்
திரிந்தாலு மென்னிழ னீங்காது கூடித் திரிவதுபோற்
பிரிந்தேக வொட்டாத கன்ம நியதிப் பிடிப்பறுக்க
மருந்தாகி யம்ம மகமாரி யோடிமுன் வந்தருளே. (96)

வந்தெனக் கேற்ற வரமரு ளாது வருந்தவிடிற்
சந்ததந் துக்கச் சலதியின் மூழ்கித் தளருவல்யான்
கொந்தலர்க் காநிறை கொத்துக் குளத்துயர் கோயிலின்கண்
வந்தமர் தேவி மகமாரி தெய்வ மலர்க்கொடியே (97)

கொடியைச் சுமந்தயர் கொம்பே யுணருங் கொடிப்பொறையைப்
படரும் பிணிப்பொறை தாங்குநர்க் கன்றிப் பலரறியா
ரடியன் றுயர்ப்பொறை யாரேற் றிரங்கி யருளளிப்பார்
துடியொன் றியவிடை மாமாரி செய்தி துணையெனக்கே.(98)

துணையா யிருந்தெனைக் காப்பது மன்றியித் தொல்லுலகி
லிணையா தரவின்றி வாடுமற் றேழை யனைவரையு
மிணையாய்ப் பிழைபொறுத் தாண்டருள் வாயென் றினிதிரந்தேன்
கணையேயத் துயர்விழி மாமாரி வாழ்கவிக் காசினியே (99)

காசினி முற்று மினிதோங்கி வாழ்க கலைபரவ
பேசருஞ் சைவ மதமோ டறங்கள் பெருகியுற
வாசற மாரி மலர்த்தாட் கிசைத்தவந் தாதியிதை
நேசமொ டோதுவர் கேட்போரும் வாழ்க நிதஞ்சிறந்தே. ()

மகாமாரி அம்மன் அந்தாதி முற்றிற்று.

---

# மகாமாரிஅம்மன் அந்தாதி அரும்பதவுரை.

செய்யுள்.

1. அம்பொன் - அழகிய இலக்குமி.
2. பவனம் - வீடு ; ஆறு - வழி ; அவநம் - அன்பு.
3. வருவாய் - வரவுகட்கானஎது, வருமானம்; உறுத்தல் - வருத்தல்.
4. சென்றபவம் - கடந்த பிறப்பு.
5. எறிதல் - வெட்டல்
7. மரகம் - பேதிநோய் ; குதூகலம் - விருப்பம், தளம் - பூவிதழ்.
8. நவை - குற்றம்.
11. கூர்ந்தவித்தாங்கு - மிகுத்துத்தணித்தது போல.
12. கறையில் நடை - குற்றமற்ற நடை.
13. நசை - ஆசை.
19. ஒட்டல் - இடங்கொடுத்தல், உடன்படல்.
20. கரி - சாட்சி.
25. அறல் - கருமணல்.
28. தாயகன் - பாலன்; பாயசம் - பால்.
29. புழுக்கம் - பொருமை, வெப்பம்.
31. சால் - படைச்சால் - உழவுசால்.
32. புல்லுருவி - குருவிச்சை; கொங்கு - வாசனை.
33. முருக்குதல் - கொல்லுதல், அழித்தல்.
37. ஓடையில் - நீரோடைபோன்று.
38. துய்த்தல் - அனுபவித்தல்.
39. கா - காப்பாயாக.
44. பருவரல் - துன்பம்.

49. விளர் - இளமை; மிளிர் - பெருமை.

52. துளங்கல் - அசைதல், கலங்கல்.

55. இகம் - இவ்வுலகம்.

57. செயிர் - துன்பம், குற்றம்.

64. கடுத்தல் - போலுதல்.

66. இனைதல் - வருந்தல்.

70. பெற்றி - குணம்; உய்த்தல் - செலுத்தல், சேர்த்தல்.

71. ஓம்பல் - பாதுகாத்தல், வளர்த்தல்.

72. முருந்து - வெண்குருத்து, இறகினடிக்குருத்து.

73. ககனம் - ஆகாயம்; கணம் - விண்மீன், தாரகை; பொதுளல் - நெருங்கல்.

74. படிறு - களவு, பொய், வஞ்சம்.

75. விழைதல் - விரும்பல்.

77. அலமரல் - வருந்தல், சுழலல்.

83. கனதி - பெருமை

97. சந்ததம் - எப்பொழுதும்; சலதி - சமுத்திரம்

---

## பத்தாவது

# நல்லிசை நாற்பது.

### காப்பு.

(நேரிசை வெண்பா.)

அந்தா மரையயனு மச்சுதனுந் தேடரிய
பைந்தா ரிதழிப் பரமசிவன்—றந்தகரி
மாமுகத்துப் பிள்ளை மலரடியை வந்தித்தே
நாமகத்து வைப்பாம் நயந்து. (1)

வாரணத்தின் பாதமலர் வந்தித்து நாமகத்தில்
ஆரவைத்துக் கொண்டா லருளுண்டாம்—பாரகத்தில்
எல்லா நலனு மினிதமையு மெஞ்ஞான்றுஞ்
செல்வாக்கு முண்டாஞ் சிறந்து. (2)

### நூல்.

தங்கமலை வெள்ளிமலை தக்கமனை மக்களொடு
சங்கரனார்க் கேற்றவெலாந் தாமிருக்க—அங்கவரேன்
பிச்சைக்கு நாடிப் பெருமோடுங் கைப்பிடித்து
நச்சிவெளி வந்தார் நவில். (1)

ஒருமான் முடிமே லொருமான் கரத்தில்
அரைமானும் பாகத் தமர்ந்தால்—பெருமான்
வருமானங் காணுமோ மற்றவரைக் காக்க
இரவாதென் செய்வா னிருந்து. (2)

ஆதி சிவனு ரழல்விழியி லோர்பாதி
பாதி யுமையாட்கும் பங்குண்டே—நீதிகெடச்
செப்பரிய மன்மதனைச் சேணறியச் சுட்டபழிக்
கெப்படிப்பங் கின்று மியம்பு. (3)

பாலன் சுவைக்கறியிற் பங்குதவி னுனில்லை
ஆலத்தும் பங்கில்லை யானதனுல்—சேலொத்த
கண்ணுமையாள் கட்பழியிற் காற்கூறுங் கைக்கொள்ளற்
கெண்ணுவளோ போம்போ மெழுந்து. (4)

நால்விருத்தி மார்பிருத்தி நற்பாகத் தேயிருத்தி
மூவ ரிருத்தியதேன் மொய்குழலார்—சேவித்துப்
போனுர் புலவர் தவத்தர் புகழடியர்
ஆனு ரவர்ப்பின் னடுத்து. (5)

வேதன் சிரமிழப்ப விண்டாழி வாய்துயில
நாதன் பலிக்கு நடந்தக்கால்—மாதர்தாம்
என்செய்வர் மீகாம னில்லா மரக்கலங்கள்
பின்செல்லு மோநெறியிற் பேசு. (6)

பிரமன் பெரும்படைப்பி லொன்றும் பிறைபோய்ப்
பரமன் முடிமேற் பதிந்தால்—பரமன்
முடியறியா தவ்வேதன் முன்னனன்னத் தேறி
நெடிதலைந்த தென்னே நிகழ்த்து. (7)

கங்கை பரவக் கடியரவு மேசூழக்
கொங்கிதழி மூடிக் குவிந்திட்டால்—சங்கரன்றன்
வண்ண முடியும் மறையாதோ மற்றதனைக்
கண்ணுறவும் போமோ கணித்து. (8)

விடையிற் சிவனேற வெண்கதிர்சென் றன்னேன்
சடையேறிக் கொண்ட தரமென்—நடைவழியில்

வெங்கதிரைத் தாங்கிவர வேறுகுடை யில்லாத
பங்கத்தா லாமோ பகர். (9)

பித்தன் பெரும்பித்த னென்றுலகோர் பேசுமொழி
அத்தை மறுத்திங் கவிர்மதியான்—வைத்துள்ளேன்
என்று பரம னியம்புமுறை போன்மதியைத்
தன்றலைமேற் கொண்டான் றரித்து. (10)

ஆட்டுக்கா லைத்தூக்கி யந்தகற்கு விட்டெறிந்த
வாட்டுகோ ரப்பையன் மாதேவி—காட்டிற்போய்
ஆனைக்கன் றொன்றை யவசரத்திற் பெற்றாலின்
றானத்தே வைத்தா டணித்து. (11)

வருவா னொருகுமரன் வள்ளிக்குப் பின்னே
திரிவா னவளைத் திருப்ப—வெருவானைக்
கன்றொன்று வேண்டிவரு மென்றே கணித்துமையாள்
அன்றுபெற்று வைத்தா ளறி. (12)

கங்கையைமுன் கட்டியவன் கங்கையைப்பின் கட்டற்கே
மங்கைதரு பிட்டெல்லாம் வாங்கியுண்டு—பங்கடையாப்
பேதத்தா லம்ம பிரம்பி னடிவாங்கி
வாதைப்பட் டன்றொளித்தான் மன். (13)

காட்டி னரியைக் கலினப் புரவியெனக்
கூட்டிக் கொடுபோந்து கொற்றவன்முன்—காட்டி
விகடங்கள் செய்தால் வினைபழிகள் போமோ
சகடங்க டாமே தரும். (14)

வாவிக் கரையிற் றவமாற்று மாதரசைத்
தாவிப் பிடித்துத் தவங்குலைத்த—பாவத்தைக்
கேட்டார் நகையாரோ கிட்டிவரு மப்பழிதான்
ஓட்டெடுத்தாற் போமோ வுரை. (15)

பிச்சைக்குச் சென்றுனைப் பேய்தொடர்ந்த வாறேபின்
நச்சித் தொடர்முனிவர் நாரியர்தம்—அச்சத்தால்
தஞ்சம் புகவேண்டித் தன்மாதைச் சார்ந்ததன்றி
வஞ்சித்தா னன்று மகிழ். (16)

தசையி னசையாற் றனிப்பன்றி பின்போய்
விசையனடி யும்பட்டான் மேலோன்—பசிதான்
மலைமானி னேர்பாதி வாய்மடுத்து மையோ
நிலையான தென்னே நிகழ்த்து. (17)

அந்தக் கடுவிடத்தை யங்காளி லுண்டக்கால்
முந்துங் கனலோங்கி மூளாதோ—சந்தித்த
ஏனத்தை வீம னிளவல் கொளவிட்டுப்
போனக்கா லுண்டோ புகழ். (18)

வீசி வலைகொண்டு மீன்படுக்கு மச்சிவன்மேல்
நேசங்கொண் டம்மை நெறிமடகி—மாசகறன்
கண்ணைக் கணையைக் கயலென்று காட்டிமயல்
உண்ணிறைய்ச் செய்தா ளுவந்து (19)

அவ்வா றவனை யவள்மடக்கிக் கூடாளேல்
எவ்வா றுலக மிதங்கண்டு—செவ்வாருய்
இல்லக் கடனிறுக்கு மெல்லாரு முத்திநெறி
செல்லற்கெண் ணுரோ திரண்டு. (20)

அன்பர்க்கு வீடுதவு மாதி சிவன்றனக்கு
முன்பொருவீ டின்றி முகில்மேயும்—பொன்பொருப்பிற்
சென்றிருந்தா னங்கதனைத் தென்னிலங்கை ராவணன்போய்
அன்றுபறித் திட்டா னசைத்து (21)

பத்துத் தலையுடையான் பத்திரண்டு கையாலு
மெத்துக்கு வெற்பை யெடுத்ததெனில்—பித்தேறி

மண்விழுவ ஞயின் மடிவ னுமைவாய்க்கும்
மண்விழுமா மென்றே மதித்து. (22)

நல்ல வரங்கேட்டு நாடிவந்த ராவணற்கோர்
கல்லே யிலிங்கமெனக் கைக்கொடுத்துச்—செல்லுகையில்
மைந்தனையு மேவி வழிப்பறித்தா னிவ்வகைத்தே
அந்தவர னுற்று மறம். (23)

பிச்சை யெடுத்துழலும் பித்தனுக்குப் பின்னேடிப்
பிச்சைதா வென்றுற் பெறுவதுண்டோ—மெச்சுந்தன்
பல்லைக்காட் டாமற் படரடவிக் கோர்துணையாய்க்
கல்லைத்தந் தானுங் கணித்து. (24)

நள்ளிரவிற் றூது நடந்த சிவனரின்
கள்ளத் தனமெல்லாங் கண்டீரோ—துள்ளிப்போய்க்
கையோலை காட்டிக் கடிமா மணந்தடுக்கப்
பொய்யுரையுஞ் சொன்னர் புனைந்து. (25)

தந்தைதாய் சுற்றந் தனக்கில்லாத் தாழ்ச்சியினல்
எந்த வகையு மிடும்பிசைத்துச்—சொந்தமெனக்
கொண்டா னொருசிறையைக் கூருநகைக் கோர்வெட்க
முண்டாவ தில்லென் றுணர். (26)

தக்கன் றனையடக்கத் தக்கவலி யில்லாமல்
மிக்கபுகழ் வீரனைமுன் விட்டானே—முக்கண்ணன்
மாமற்குச் செய்யும் வரிசை யிதுவானு
லேமற்றோர்க் கென்னு மியம்பு. (27)

தன்மருகன் கூழுக்குத் தாணிரத்தல் கண்டிருந்தும்
பின்பவனை நீக்கிப் பிறர்க்கெல்லா—மின்பமிகக்
காட்டி யவிப்பாகங் கையளிப்பி னம்மருகன்
கேட்டிருப்ப ஞமோ கிளத்து. (28)

பல்லுக் கிதமாய்ப் பலதசையு மூட்டிவரு
வில்லுக்கை வேடன் விழிபறித்தான்—சொல்லக்கேள்
செய்நன்றி கொல்லுஞ் சிவனுக்கெக் காலத்து
முய்வுண்டு கொல்லோ வுரை. (29)

கண்ணனை முன்னோர்மலர்க்காய்க் கண்பறிக்கவைத்தவனென்
றெண்ணுமல் வேடனிறைச்சிகொடுத்—துண்ணென்றால்
தீமை விளையாதோ தீயவரைக் கொண்டாடிற்
சாமளவுஞ் சஞ்சலமே தான். (30)

பொய்யில் பரமனுக்குப் பூவாடை கோடியுண்டு
வெய்யில் குளிர்பனிக்கு மேலாடை—கையிலிலை
அத்தாற் கரியுரியை யன்றெடுத்துப் போர்த்துலகில்
வைத்தானே பொல்லா வசை. (31)

கரியி னுரிபோர்த்த காரணத்தை முற்றுஞ்
சரிநீ யறிந்ததிலைச் சாற்றின்—உரியுரிய
முன்னாளிற் பட்ட வடித்தழும்பை மூடற்காய்
இந்நாளிற் செய்தா னிது. (32)

மொய்குழலாள் தன்னுடனே முன்பாடு சூதுதனிற்
பொய்யுரைக்க மாலுக்குப் புத்திசொல்லி—வையமிசை
பாம்புருவம் பெற்றுப் பரதவிக்க விட்டானே
சாம்பசிவன் செய்கையிது தான். (33)

மைந்தனொரு சப்பாணிப் பிள்ளை வடதருக்கீழ்
வந்திருந்தா னோர்துணையும் வாய்க்காம—லிந்தவகை
மாமனையே காவற்கு மற்றவன்பா லுய்த்தனனுங்
காமனையே சுட்டான் கணித்து. (34)

என்னவரங் கேட்டாலு மில்லையென்று சொல்லாமல்
முன்னுதவிப் பின்பறிப்பான் முக்கண்ணன்—அன்னவன்பால்

பெற்றபுகழ்ச் சூரன் பெருவரங்க ளெல்லாம்போய்
அற்றவகை யென்ஞ மறை. (35)

இல்லைப்போ வென்று விரக்கத்தான் போமிடத்துஞ்
சொல்லதையே எல்லவருஞ் சொல்வரென—மெல்லவரன்
எவ்வரமு முன்னீந் திரக்கு மியல்புதனல்
அவ்வரமீட் டேற்பா னடுத்து. (36)

மன்றல் வளங்காண வந்தவரி லோர்முனியைத்
தென்றிசைக்க ணோட்டிச் செலுத்தினனே—குன்றெடுத்து
வில்லாகச் செய்த விமலற் கிதுவழகோ
சொல்லாரச் சொல்லீர் துணிந்து. (37)

அந்தமுனி யேழ்கடனீ ரள்ளிக் குடித்தபெரும்
உந்தியினன் மன்ற லுணவெல்லாந்—தந்திரமாய்த்
தின்றிடுவ னென்றேங்கித் தென்றிசைக்குத் தான்சிவனுந்
தன்றிசையைச் சாட்டாய்ச் சரித்து. (38)

மங்கலஞ்சேரின்ப மணக் கோலம் பூண்டவொரு
நங்கை நறுங்குழலை நாடிப்போய்ச்—சங்கரனர்
கொய்வித் தெடுத்தார் குடிப்பிறந்த நல்லவர்கள்
செய்விப்ப ரோவிச் செயல். (39)

தன்மகடன் ருலியறத் தர்ப்பகனைக் கூசாமல்
முன்னெரித்தோ னனும் மொய்கூந்தல்—தன்சடையைப்
போன்முறுகும் பாம்பு புகுந்துகுடி கொள்ளுமெனத்
தான்களையச் செய்தனனும் சம்பு. (40)

---

## வாழ்த்து.

வாழ்க மகிதலமே வாழ்கவென வாயார
வாழ்வுரைக ளுமிசைப்பின் வாழாதோ—வாழுமெனில்
நீடூழி நீடூழி நீடூழி வாழ்கவெனப்
பாடிடுவா மென்றும் பரிந்து. (1)

வாயார நாமினிய வாழ்த்துபல சொன்னாலுந்
தாயான மூர்த்தி தயவின்றேல்—வாயாவாம்
மற்றவனை முன்னேத்தி வையகமே வாழ்கென்று
சொற்றனமே யுள்ளந் துணிந்து. (2)

நல்லிசை நாற்பது முற்றிற்று.

---

தோத்திரக்கோவை முதற்பாகம் முற்றும்

திருச்சிற்றம்பலம்.





Printed at the Commercial Press, Madras, S. E.




## வித்துவான், ச. பூபால பிள்ளை அவர்கள் இயற்றிய நூல்கள்:—

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| (1) | விநாயக மான்மியம் ... | 1 | 0 | 0 |
| (2) | சீமந்தனி புராணம் ... | 0 | 12 | 0 |
| (3) | தமிழ் வரலாறு ... | 2 | 0 | 0 |
| (4) | தோத்திரக் கோவை ... | 0 | 6 | 0 |

பிரதிகள் வேண்டுவோர் ஆசிரியருக்காவது அடியிற் கண்ட விலாசத்திற்காவது எழுதிப்பெறலாம்.

சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளை,
20, காரணேசுவரர் கோயில் வீதி,
மயிலாப்பூர், சென்னை.

Commercial Press, Madras. S. E.